யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்
ஸ்ரீ லங்கா.



திருவாட்டி லீலாவதி இராமநாதன்
நினைவுப் பேருரை

# சைவசித்தாந்த விளக்க விருத்தியில் யாழ்ப்பாண அறிவியல் மேதையின் சுவடுகள்

வழங்கியவர் :
ஏழாலையூர்
பண்டிதர் மு. கந்தையா அவர்கள்



12 செப்டெம்பர் 1994

யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்
ஸ்ரீ லங்கா.



திருவாட்டி லீலாவதி இராமநாதன்
நினைவுப் பேருரை

# சைவசித்தாந்த விளக்க விருத்தியில் யாழ்ப்பாண அறிவியல் மேதையின் சுவடுகள்

வழங்கியவர் :
ஏழாலையூர்
பண்டிதர் மு. கந்தையா அவர்கள்

12 செப்டெம்பர் 1994

# முகவுரை

ஈழைத்தேசம் வந்ததற்குப் பின் லீலாவதி எனப் பெயர் கொண்ட செல்வி R. L. ஹரிசன் அவுஸ்திரேலியாவில் இருந்து சமயத்தை ஒப்பீட்டு அடிப்படையில் உணர்ந்து உண்மையைக் காணும் பெரும் வேட்கையுடன் ஞானிகளைத் தேடி இங்கு வந்தார். அவ்வாறு வந்தவர் சேர். பொன். இராமநாதனைச் சந்தித்து அவரையே தமது ஞான குருவாக ஏற்றுக்கொண்டார். அவரிடம் குரு - சிஷ்ய முறையில் இருந்து இந்து தர்மத்தை விளங்கி, ஓர் சைவப் பெண்மணியாக வாழத் தொடங்கினார். செல்வி ஹரிசனின் அறிவாற்றலையும் சமய ஞான ஈடுபாட்டையும் கண்ட இராமநாதன், அவரைத் தமது அந்தரங்கச் செயலாளராக நியமித்தார். பின்னர் தாம் சொற்பொழிவாற்ற அமெரிக்கா சென்ற போது செல்வி ஹரிசனையும் அழைத்துச் சென்றார். அமெரிக்காவில் இருந்து திரும்பிய பின்னர் அவரைத் திருமணம் செய்து கொண்டார்.

சேர். பொன். இராமநாதனின் சேவைகளுக்கும் இலட்சியங்களுக்கும் உறுதுணையாக வாழ்ந்தவர் பெருமாட்டி லீலாவதி அம்மையார். இராமநாதன் இறந்ததற்குப் பின்னரும் அவரது இலட்சியங்களை நிறைவேற்றுவதற்காகவும், யாழ்ப்பாணத்திலே சைவத் தமிழ்ப் பண்பாட்டினைப் போற்றி வளர்ப்பதற்காகவும் அரும்பாடுபட்டவர். யாழ்ப்பாணத்திலே இராமநாதன் கல்லூரியும் பரமேசுவராக் கல்லூரியும் சைவத் தமிழ்ப் பண்பாட்டின் உயர்நிலைகளாக விளங்குவதற்கு வேண்டியவற்றையெல்லாம் செய்து வந்தார். சைவ மங்கையர் வாழ்விற்கு எடுத்துக் காட்டு எனக் கூறத்தக்க வகையில் வாழ்ந்து வந்த பெருமாட்டி லீலாவதியார் தமது கணவர் நிறுவிய சைவ மங்கையர் சபைக்குத் தலைவராக இருந்தும் பணிபுரிந்தார்.

தமக்கு ஆரம்ப காலத்திலே இந்து தர்மத்தை உணர்த்திய போது சேர். பொன். இராமநாதன் கிறிஸ்தவ வேதாகமத்தின் பகுதிகளாகிய Gospels according to St. Mathew and St. John ஆகியவற்றிற்கு ஞானயோக அடிப்படையில் கூறிய விளக்கங்களை பெருமாட்டி லீலாவதி அம்மையார் இரு தொகுதிகளாகப் பதிப்பித்தமையையும், 1907 ஆம் ஆண்டில் Western Pictures for Eastern Students எனும் 245 பக்கங்களைக்

கொண்ட நூலை எழுதி லண்டனில் வெளியிட்டமையையும் The Ramayana Briefly Told in Ehglish எனும் 274 பக்கங் களைக் கொண்ட நூலை எழுதியமையையும் இங்கு குறிப்பிடு தல் பொருத்தமாகும்.

லீலாவதி இராமநாதன் பெற்றிருந்த சமுதாய மதிப்புக் குரிய உயர் நிலையையும் மேம்பாட்டினையும் கண்ட இலங்கைப் பல்கலைக்கழகம் அவருக்குச் சட்டக்கலாநிதி ( Doctor of Laws) எனும் கௌரவப் பட்டத்தை வழங்கியது.

பெருமாட்டி லீலாவதி இராமநாதனின் உள்ளத்தைக் கவர்ந்த பொருளாகிய சைவசித்தாந்தம் பற்றி, அவரது மருமகன் நடேசபிள்ளை அவர்களுடன் நெருக்கமாகத் தொடர்பு கொண்ட அறிஞரான ஏழாலையூர் பண்டிதர் மு. கந்தையா அவர்கள் இந்த வருட நினைவுச் சொற்பொழிவை ஆற்றியுள்ளார். நினைவுச் சொற்பொழிவிலே சேர். பொன். இராமநாதனும் அவருக்கு முந்திய மூவரும் பிந்திய மூவரும் ஆக் ஏழு அறிஞர் யாழ்ப்பாணத்திலே சைவ சித்தாந்த விளக்க விருத்திக்கு ஆற்றிய பணி பற்றி ஆராயப்பட்டுள்ளது.

பண்டிதர் கந்தையா அவர்கள் சைவ சித்தாந்தத்திலே பிரபல்யமான, நாடறிந்த அறிஞர். அவர்கள் சைவ சித்தாந்தம் பற்றி பல நூல்களும் ஆய்வுக் கட்டுரைகளும் எழுதி உள்ளார். திருக்கேதீச்சர மான்மியம் புராதனகாண்டம், பொற்பொளிர் காண்டம் இயற்றியவர். இன்னும் நான்கு காண்டம் எழுதவுள்ளார். நாவலர் பெருமான் எழுதிக் குறையாக விட்ட பெரிய புராண சூசனத்தை நிறைவு செய்துள்ளார். நூலும் வெளிவந்துவிட்டது பெரும் சிந்தனையாளர் என மதிக்கப் பெற்ற பொ. கைலாசபதி அவர்களின் சைவசித்தாந்த சிந்தனைகளை விளக்கியும் விரித்துரைத்தும் நூலொன்று எழுதுமாறு எமது பல்கலைக்கழகம் அவரைத் தகுதி கண்டு அழைத்துள்ளது. எல்லாவற்றிற்கும் மேலாக, பண்டிதர் அவர்கள் சைவத் தமிழ்ப் பண்பாட்டிற்கு ஏற்பத் தமது வாழ்க்கையை அமைத்துக் கொண்டவர். அவரின் இந்த நினைவுப் பேருரை சைவசித்தாந்தத்தில் ஆர்வமுள்ள அனைவருக்கும் விருந்தாக அமையுமென நம்புகிறேன்.

யாழ். பல்கலைக்கழகம்
யாழ்ப்பாணம்.
10 - 10 - 95.

பேராசிரியர் க குணரத்தினம்
துணைவேந்தர்

# முன்னுரை

சைவத் தமிழ்ப் பண்பாட்டின் நிலைபேற்றுக்கின்றியமையாத தாய்மை இல்பின் தூய்மை விளங்கப் பல்லாண்டுகளாக நம்மிடையே திகழ்ந்தவர் திருமதி லீலாவதி இராமநாதன் அவர்கள். இலட்சியதாகமுந் தீர்ந்த நோக்குங் கொண்டிருந்த சேர். பொன். இராமநாதன் அவர்கள் மருதனார் மடத்தில் மகளிர் கல்லூரி நிறுவும் பொழுதில் அவர் காட்சியிற் பட்டிருந்த இலட்சியத் தாய்மைத் தோற்றம் இதுவாகவேயிருந்திருக்கும் என யாரும் ஊகித்துணர்ந்து மகிழ்தற் கேதுவான ஒருவகையில் இவர்கள் இக்கல்லூரி நிர்வாகப் பொறுப்பில் அமைந்திருந்த காட்சி மிக இதமானது. இனத்தாலும் மொழியாலும் சமயத்தாலும் அந்நியரான இவ்வம்மையார் சைவத் தமிழ்ப்பண்பாட்டின் பாதுகாவலரான திரு. இராமநாதனுக்குத் தர்மபத்தினியாயமையக் கூட்டி வைத்த திருவருட் குறிப்பும் அதுவாதல் சாலும்.

இவ்வம்மையார் சுயமான தம் இனமத மொழிப் பிடிப்புக்களை முற்றாகக் கைநெகிழ்ந்து சுத்தத் தமிழ் உடைநடை பாவனைகளிற் பயின்று வீபூதி உருத்திராக்க தாரியாய் விளங்குதலிற் திருப்தி கூர்ந்து திருமுறைக் கேள்வியிலுஞ் சைவசித்தாந்த விசாரத்திலும் ஈடுபாடுற்று விளங்கியமை வியக்கத்தகுந்தரத்தினதாயிருந்தது கண்கூடு. இந்த நேரடி மாற்றத்துக்குக் காரணம், இவர் தமது ஆன்ம விசாரந் தீர்க்கும் நல்லாசிரியராக திரு, இராமநாதனைத் தேடிக் கண்டடைந்து பெற்ற நேர்முக அநுபவப் பேறாம். அதன் விபரம் வருமாறு:

வளம்மிக்க உயர்குலத்து ஆங்கில மகளாயிருந்தும் இவ்வம்மையார் உலக சுகபோகங்களிற் திருப்தியுறாது பூர்வபுண்ணிய வசத்தினாலே இளவயதிலேயே ஆன்ம விசாரந் தலைக் கொள்ளப் பெற்று அதற்குதவ வல்லாரைத் தேடுந் தேட்டத்தின் சார்பில் திரு. இராமநாதனை அணுகுவராயினர். இராமநாதன் இவரின் மத நூலாகிய 'பைபிள்' கூறும் உண்மைகளில் இவருக்கிருந்த ஐயங்களைத் தெளிவித்ததன் சார்பில், தம்மத போதகர்களுக்கு வாய்க்காத உள்ளுணர்வு விவேகமொன்று இவருக்கிருப்பதையும் அதன் காரணம் இவரின் சுவமதமாகிய சைவ சித்தாந்த ஞான வீறே என்பதையும் திருப்திகரமாகக் கண்டுணர்ந்து கொண்டார், உணர்ந்து

கொண்டதுமே, சமய மாத்திரைக்காகவன்று, சமயம் உண்மை விளக்கப் பேற்றுக்காகவே, சமயம் உண்மைவிளக்கம் பெறுமளவுமல்ல, அதன் பவப் பேற்றுக்கு வழிநடத்த வல்ல நெறிவழி நிற்றலிலேயே உண்மை அனுபவப் பேறு, எனுந் துணிபெழுந்து அவர் சைவநிலை நிற்பாராயினர்.

மறுசமய வேதங்களிலும் மெய்யியல் உண்மைகளைத் தொட்டுரைக்கும் பகுதிகள் சில பல உள. ஆனால், அவற்றின் தாற்பரியப் பொருளைச் சரியான கோணத்தில் வைத்து விளக்குமாற்றல் சைவசித்தாந்தத்துக்கே உண்டு என ஏலவே சிவஞானபோதம். சிவஞான சித்தியார், சங்கற்பநிராகரணம் என்ற நூல்களாற் சூசிப்பிக்கப்பட்ட இவ்வுண்மைக்கு இவ் வம்மையார் செய்தி கண்கண்ட உதாரணமாகின்றது. இவ் வுண்மை தம் பேருரைகள் மூலம் அகில உலக மட்டத்தில் பிரயோகமாகச் செய்த திரு. இரா்மநாதன் பிரசங்கங்களை உடனிருந்து கேட்டு அவற்றிற் பொதிந்துள்ள சித்தாந்தப் பொருட்புதிர்களைப் புதுப்பசுமை மங்காமல் நூலுருவிற் தொகுத்துத் தந்துள்ளமை இவ்வம்மையார் சைவசித்தாந்தத்துக் காற்றிய சேவையாகவே கொள்ளப்படும். இவர்தம் இவ் வருடத்தைய நினைவுப் பேருரை, சைவசித்தாந்த விளக்க விருத்தியில் யாழ்ப்பாண அறிவியல் மேதையின் சுவடுகள் எனுந் தலைப்பில் அமைய நேர்ந்ததன் பொருத்தம் இவ்வாற்றான் அமையும்,

தென் தமிழ்நாடுந் தமிழீழமும் தோற்றத்தில் இரண்டா யினுந் தொடர்ச்சியில் ஒன்று. இது எப்பவோ முடிந்ததாக உணரப்பட்ட உண்மைகளிலொன்று. தமிழீழத்துக்குள்ள சைவ சிததாந்த உறவுஞ் செறிவும் தத்ரூபமாகத் தமிழகத்துக்குள்ள தொன்றே. சைவசித்தாந்தப் பொருளைத் தெளிவுபடுத்துங் கைங்கரியத்தில் தமிழகந் தழுவிய அணுகுமுறைகளும் அவற்றை விட விசேடமான அணுகுமுறைகளுங் கூட இங்கு தழுவப் பட்டமைக்கு அத்தாட்சி உண்டு. தமிழக அறிஞர்களே அவற்றை நயந்துரைத்தமைக்காம் அத்தாட்சிகளுமுண்டு. அங்கு சித்தாந்த நூலுரைகள் நவமாக வெளிவந்தது போல் இங்கும் வெளிவந்த துண்டு. 1950 இல் வெளிவந்த அச்சுவேலி, திக்கம் செல்லையா அவர்களின் துகளறு போத உரையும் அதற்கு வெகுமுன்பாகவே நந்தன வருஷத்தில் வேலணை, வி. கந்தப்பிள்ளையால் முதல் பதிப்பாக உரையுடன் வெளியிடப்பட்ட தத்துவப் பிரகாச நூலும் போல்வன அதற்கத்தாட்சியாம் என்பது அவ்வவற்றின் முகவுரைகளாற் பெறப்படும.



இத்துறையிற் பதினாறாம் நூற்றாண்டினரான திருநெல் வேலி ஞானப்பிரகாசரின் வட மொழிச் சிவஞான போத விருத்தி, தமிழ்ச் சிவஞான சித்தியாருரைகள் முதல் இன்றைய பண்டித மணியின் அத்வைத சிந்தனை ஈறாகச் சைவசித்தாந்த விளக்கத்துக்குபகரித்துள்ளவை மிகப்பல. அவற்றின் ஆசிரியர் களான யாழ்ப்பாண அறிவியல் மேதைகளின் சுயவிளக்கப் பகுதிகளிலும் அவைதொறுங் கண்டுணர உள்ளன. அவருள், சேர். பொன். இராமநாதன் அவர்கள், தமிழ்மொழி மூலம் செய்ததிலும் பார்க்கக் கூடுதலாக ஆங்கில மொழிமூலம் சைவசித்தாந்த விளக்கஞ் செய்துள்ளார். அவ்வகையிலும், கொக்குவில் சபாரத்தின முதலியாரும் சைவப் பெரியார் சிவபாத சுந்தரமும் விஞ்ஞான மாணவன் விஸ்வநாதபிள்ளை யுஞ் செய்த அளவுக்கதிகமாம்படி தமது சைவசித்தாந்த ஞான ஒளியில் முக்கியமான சுவிசேஷங்கள் – சென்யோன், சென்மத்யு – இரண்டுக்கு விளக்கந் தந்துள்ளார். இன்னும் அதற்கதிகமாம் படி சைவம் தமிழ் வாசனைகள் சற்றும் பயிலாத அன்றைய அமெரிக்க நாட்டில் அந்நாட்டார் தம்மில் திருப்தியுற்றுத் தம்வாயாற் போற்றும் வண்ணம் தாம் நிகழ்த்திய சுற்றுலாத் தொடர்ப் பிரசங்கங்களால் சைவசித்தாந்த உணர்வு அகில உலக மட்டத்திற் பிரதிபலிக்க வைத்துள்ளார். அமெரிக்க யாத்திரைக்குமுன் அதே ஆண்டில் சிதம்பரத்தில் நடைபெற்ற சென்னைச் சைவசித்தாந்த மகாசமாஜத்தின் முதலாவது வருடாந்த மகாநாட்டுக்குத் தலைவராக வரிக்கப்பட்டவரும் அவரே ஆகின்றார்.

இந்நோக்கில் அவரை மையமாகக் கொண்டு அவர்க்கு முன் மூவரும் பின் மூவருமாகச் சைவசித்தாந்த நூல்கள் உரைகள் எழுதி வெளியிட்டோர் அறுவரோடு எழுவர்களின் சைவசித்தாந்த அறிவியல் மேதாவிலாசம் இவ்வுரையில் பேசப் படுகின்றது. ஐந்தடுக்கில் கண்டனப் பிரதிகண்டனக் கீர்த்தி பெற்ற சைவமகத்துவம் என்னும் நூல் இயற்றிய ராவ்பஹதூர் சி. வை. தாமேதரம்பிள்ளை முதல் சுவேதாஸ்வரத உபநிடதத் தின் சைவஞானப் பொறுதியை தமிழ்வியாக்கியான மயமாக்கி இந்து சாதனப் பத்திரிகை மூலம் வெளியிட்டுள்ள ஐ. பொன்னையாவும் அவரொப்பார் பிறரும் ஈறாக உள்ளார் பலர். சைவசித்தாந்த விளக்க விருத்தியிற் பதித்துள்ள மேதா விலாசப் பதிவுகளும் பலவாம். அவையெல்லாம் சிந்தனை வகையால் தழுவிக் கொள்ளப்படுமளவில் அமைவோயாக. (கு + பு: ஐந்தடுக்கு: சைவமகத்துவம் 2 சைவமகத்துவ ஆபாசம் 3. சைவ மகத்துவ ஆபாசதிக்காரம் 4. சைவமகத்துவ ஆபாசதிக் காரநிக்கிரகம். 5 சைவமகத்துவ ஆபாச திக்கிரக எதிரேற்று ).

# அநுபந்தம்

சித்தாந்த நூல் உரைகள் அனைத்தையும் ஒன்றொழியாமற் பேணிப் பிரசுரித்து வந்த திருவாவடுதுறை யாதீனம் சிவஞான சித்தியார்க்கு ஞானப்பிரகாசர் எழுதிய உரையை மட்டும் அது சிவசமவாத உரை என்ற காரணத்தாற் பிரசுரிக்கவில்லை. 1982 இல் ஈழத்தில் நடைபெற்ற அகில உலக இந்து மகாநாட்டு மலருக்கெழுதிய கட்டுரை ஒன்றில் இவ்வாறு குறிப்பிடும் திரு. நல். முருகேசு முதலியார் தொடர்ந்து கூறுகையில், ஞானப்பிரகாசரின் பிற்கால வாழ்வு தமிழ்நாட்டிற் கழிந்தமையால் ஈழத்துக் கல்வி மான்களும் அவருரையைக் கருத்தூன்றிக் கற்கவில்லை என்றுள்ளார். ( As Gnanaprakasar spent the latter part of his life in Tamil Nadu, Sri Lanka Scholars too have not attempted a Critical Study of his Commentary, Page 101 ) ஆனால் 1838 க்குச் சரியான சர்வசித்து வருஷம் மகர மாசத்தில் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரின் மாணவர்களுள் முதுவரெனக் கருதப்பட்ட இணுவில் நடராசஐயர் ஞானப்பிரகாசர் உரையை ஆராய்ந்து திருப்பற்று சின்னையநாடார் யந்திர சாலையில் அச்சுிடுவித்துள்ளார். பிரதிகள் இன்றும் பார்க்கக்கூடிய நிலையிலுள்ளன.

இந்த நடராசையர் வேலணை ஆசிரியர் வி. கந்தப்பிள்ளைக்குக் குருவாயிருந்ததாகக் தத்துவப் பிரகாச முன்னுரை மூலமும் காசிவாசி செந்திநாதையர், நடராசையரிடம் சைவ சித்தாந்தங் கற்றதாக 1978 இல் வெளியான செந்திநாதையர் மலருக்கு ( செந்திநாதையர் ஞாபகார்த்த சபை, குப்பிளான் ) பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை எழுதிய கட்டுரை ( பக்.12 ) மூலமும் அறிய வருகின்றது. உயர் தரமான இந்தக் குருசீஷர்களிடையில் அவ்வுரை கருத்தூன்றிக் கற்கப்படாதிருந்திருக்கும் என்பதற்கில்லை.

குறித்த வி. கந்தப்பிள்ளை அவர்கள் நாவலர் மாணவனாய்க் கற்றுத்தேறி வேலணையில் தாமே சைவப் பிரகாச வித்தியாசாலை ஒன்றமைத்துத் தலைமையாசிரியராயிருந்து நடத்தித் தீவகப் பகுதிச் சைவ சைவசித்தாந்த விளக்க மேன்மைகளுக்கு ஆதர்ஷ புருஷராயிருந்தவர். உமாபதி சிவாசாரியர் குரு மரபிற் கங்கை மெய்கண்டார் வழிவந்த சிற்றம்பல நாடிகளின் சீடர் அறுபத்துமூவரு ளொருவரான தத்துவப் பிரகாசர் ஆக்கிய தத்துவப்பிரகாசம் எனுந் சைவசித்தாந்த நூலை ஆராய்ந்து முதற் பதிப்பாக இவர் நந்தன ௵ மாசிமாசத்தில் வெளியிட்டுள்ளார். அதன் முன்னுரையில் அவர் கூறும் பின் வரும் பந்தி கருதத்தகும்.

இது சைவசமயிகளுக்கு ஆவசியகம் வேண்டிய நூலாயிருந்தும் இதுகாறும் அச்சில் வெளிவாராமையால் இதனை எவர்க்கு – முபயோகப்படுத்தக் கருதி எம்மிடமிருந்ததும் இங்கே கிடைத்ததும் வேதாரணியம் முதலிய இடங்களிற் கிடைத்தது மாகிய பல பிரதிகளைக் கொண்டு எமது சித்தாந்த ஆசிரியராகிய இணுவில் ஸ்ரீமத் நடராஜ ஐயர் அவர்கள் சந்நிதானத்தில் இயன்றளவு திருத்தி வெளிப்படுத்தினோம் என்பது அப் பந்தி. தனியே நூல் மட்டுமன்றி திரு. வி. கந்தப்பிள்ளையின் தெளி பொருள் விளக்கவுரையுடனும் அது வெளிவந்திருத்தல் கண்கூடு.

இவர் போல், அச்சில் வெளிவராத சித்தாந்த நூல்களைத் தேடியாராய்ந்து வெளிப்படுத்தலுடன் உரைவிளக்கம் பெறாத சித்தாந்த நூல்களைத் தேடி உரைவிளக்கம் எழுதி வெளியிட்டோரும் அக்காலப் பகுதியில் இருந்துள்ளார்கள். 1950க்குச் சரியான விரோதி வருஷம் தை மாசத்தில், அச்சுவேலி திக்கம் செல்லையாபிள்ளையின் துகளறு போத உரை ( பருத்தித்துறை, கலாநிதி அச்சியந்திரசாலை ) வெளியாகியுள்ளது.

சைவசித்தாந்தத்தில் ஞானாநுபவத் துறை சார்ந்த தசகாரியப் பொருள்நிலை துகளறு போதம் என்னும் இந்நூலில் அடைவு பெற்றிருக்குமாற்றை சிவஞான சித்தியார், பஞ்சாட்சரப்பஃறொடை போன்ற சாஸ்திர நூல்களினாதாரங்களுடன் பரந்துபட விளக்கும் இதன் முகவுரைக்கண்வரும் பின்வரும் பந்தி கருதத்தகும்.

இந்நூற்கு இதுகாறு மோருரையுங் காணப்படாமையாலும் ஒருரை எழுதுவதே இந்நூலை நன்காய்ந்து தெளிந்து பயனெய்துவதற்கு வாயிலாகுமெனத் துணிந்தும் இதனைக் கற்கு – மார்வமுடைய மாணாக்கர்க்குப் பயன்படுமென நினைந்தும் இவ்வுரை எழுதப்பட்டது – என்பது அப்பகுதியாகும். இதற்குமுன் துகளறு போதத்திற்கு உரை வெளிவந்திருக்க வில்லை என்பது பின்வருவது கொண்டும் நிச்சயிக்கப்படும்.

சென்னைச் சைவசித்தாந்த மஹாசமாஜம் 1934 இல் வெளியிட்டுள்ள சைவசித்தாந்த சாஸ்திர அடங்கன் முறைப் பதிப்பில் உந்தி களிறு ... ..... ..... என்ற பிரபலமான வெண் பாவிற் காணும் ஒழுங்கில் திருவுந்தியார் முதற் சங்கற்ப நிராகரணம் இறுதியாகவுள்ள சாஸ்திரங்கள் பதினான்கையும் அச்சிட்டு இறுதியில், துகளறு போதம் என்ற நூலை அநுபந்த மாகச் சேர்த்துக்கொண்டு பரவல் வளக்கிற் பதின்மூன்றாவதாக வுள்ள உண்மை நெறிவிளக்கம் உத்தேசப்படி உள்ள உமாபதி சிவாச்சாரியார் படைப்பன்று ஆதலினாலும் அதைவிடத் துகளறு போதம் தசகாரிய விளக்கத்துக்குச் சிறந்ததாயுள்ளமையாலும் இதுவும் மெய்கண்ட சந்தானத்திற்குச் சேரக்கூடியதாகையானும் முன்னதன் இடத்தில் இது இடம்பெறலாம் என்ற நோக்கு டையார் கருத்துக்கும் ஏற்குமாறு வெளிப்பட்டிருக்கின்றது. மற்றைய பதின்னான்கையும் உரையோடு வெளியிட்டுள்ள அந் நூல் இதை மட்டும் மூலமாத்திரமாக வெளியிட்டிருத்தல் மேற் கூறிய கருத்துக்கு ஆதாரமாம்.

திக்கம் செல்லையாவின் துறை போய சைவசித்தாந்த அறிவநுபவ ஞானம் இவ்வுரை கற்பார்க்கு விருந்தாகும். அவரது முகவுரையின் ஒரு பந்தியை நோக்குமளவானே அஃதமையும்.

துகள் – குற்றம், ஈண்டு மலவாசனையானாய குற்றத்தை உணர்த்திற்று. துகளை அறுக்கும் போதமென இரண்டாம் வேற்றுமைத்தொகை, என்னை? உயர்ஞானமிரண்டாம். ‘மாறா மலமகலவகலாத மன்னு போதத் திருவருளொன்று’ எனவும் பவமதனை யறமாற்றும் பாங்கினி லோங்கிய ஞானம், உணர் வரிய மெஞ்ஞானம் எனவும் ‘தாவரும்பவத்தை வேரோடுங் களையுந் தக்கமெஞ்ஞானம்’ எனவுங் கூறுபவாகலின் துகளறு போதம், மெய்ஞ்ஞானம், அருள்ஞானம், பரஞானம், உண்மை ஞானம் என்பன ஒருபொருட் கிளவி. இந்நூற்கு விரிவாய நூலுளதோடுவன ஆராயின் மாணிக்கவாசக சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருக்கோவையாரே நானூறு துறை களாக இதனை விரித்துக் கூறுவதெனலாம். கோக்கப்பட்ட மையிற் கோவை எனப்பட்டது. ஈரியல்பாய விருபொருள் என்றும் பிரியாது ஒன்றாய் விரவிநிற்குமியல்பு கோவை யெனப்பட்டது. கோவை அத்துவிதம் என்பன ஒருபொருட்கிளவி. (பக். 3, 4 துகளறு போதம் உரையுடன்)



தசகாரியப் பொருளைத் திருக்கோவையார்ப் பொருளோ டியைத்துக் காணும் இவர் காட்சி விசேடமும், கோவை எனுந் சொற்பொருளை ஒரு புதிய கோணத்திற் கண்டு தெரிவிக்கும் இவர் விவேகமும் இங்கு குறிப்பிடத்தகும்.

திக்கம் செல்லையாவின் இத்துகளறு போத உரைக்குச் சாற்றுக்கவி கொடுத்திருக்கும் நவாலியூர் சோமசுந்தரப் புலவர் சைவசித்தாந்த இரசிகராய் விளங்கிய ஒரு தமிழ்ப் புலவர், சித்தாந்தப் பொருளுண்மைகள், தமிழ்க் கவிதை நலத்திற் கனிந்து காட்டச் செய்யுள் படைக்கும் ஆற்றல் மிக்கவர். ஆன்மீகம் சார்ந்த உண்மைகளைக் கதாபாத்திரங்களாக நிறுத்தி அவர் படைத்த உயிரிளங்குமரன் நாடகம் யாழ் சைவசித் தாந்த மேதைக்கு அவர் ஆக்கியணிவித்த பொற்பூணாகும். பழங்காலத்தில் புத்தி, கீர்த்தி, த்ருதி எனுங் குணங்களைக் கதாபாத்திரங்களாக நிறுவி அசுவகோஷர் என்பவர் புத்த சமயச் சார்பாக இயற்றிய பிரபோசந்திரோதயம் போல் அமைந்த அருமையான சைவசித்தாந்த நாடகநூல் இதுவாகும். ஆணவம், கன்மம், மாயை திரோதானம், பெத்தான்மா, சிவம், சுத்தான்மா ஆதிய சைவசித்தாந்தப் பொருட்களை முறையே சூரன், சிங்கன், தாரகன், சுக்கிரன், தேவர், முருகன், வள்ளி, நாயகி ஆதியனவாக வைத்துக் காவியமியற்றிய தன்மூலம் உயிரின் பந்தநிலை, மோக்ஷ நிலைகளுக்கு விளக்கங் கொடுத்த கச்சியப்ப சிவாச்சாரியாரின் முன்மாதிரியைப் பின்பற்றித் தாம் அவற்றை வேண்டுமாறமைத்து நாடக நூல் படைத்துள்ளார் சோமசுந்தரப் புலவர்.

திக்கம் செல்லையாபிள்ளை, சோமசுந்தரப் புலவர், சைவப் பெரியார் சிவபாதசுந்தரம், வழக்கறிஞர் தம்பையா, ஏழாலை அருளானந்தசிவம் (ஐ. பொன்னையா) முதலியோர் சமகாலத் துச் சைவசித்தாந்த அறிஞர்கள். சாஸ்திர அறிவான் மட்டு மன்றித் தமது வாய்மை, தூய்மை, திரிகரணசுத்தி, சிவபக்தி முதலியவற்றாலும் நடைமுறை வாழ்விற் சைவசித்தாந்தக் களை தோன்ற வாழ்ந்தவர்கள். அதன் சார்பில் சேர். பொன். இராமநாதன், ஸ்ரீமான் நடேசபிள்ளை என்போராலும் நன்கு மதிக்கப் பெற்றவர்கள். சாஸ்திர போதனையால் மட்டுமன்றிச் சைவப் பிரசங்கங்கள் புராணவிரிவுரைகள் மூலமாகவும் சைவ சித்தாந்த விளக்கம் பரவச் செய்துவந்தவர்கள் இவர்கள்.

ஸ்ரீமான் நடேசபிள்ளை சேர். இராமநாதனின் குருவின் பேரனாயிருந்து பின் ஸ்ரீரங்கத்து ஞானியொருவர்க்குச் (முத்துகிருஷ்ண பரமஹம்சர்) சீடனாய் மேல், இராமநாதன்

மருகனாயும் அமைந்தமையால் பிறந்திடம், வளர்ந்திடம், சேர்ந்திடம் அனைத்தினாலுஞ் சைவசித்தாந்த ஞானவிலாசம் விளங்கப் பெற்றவர். கொஞ்சுமொழியினிமை தரும் தஞ்சைத் தமிழிற் சர்வசன ரஞ்சகமாகப் பிரசங்கிக்கும் ஆற்றல் வாய்ந்தவர். சாஸ்திரத்தடங்களுக்குட் கால் தடக்கிக் கொண்டு சுபாவமாகச் சொல்லிக் கொள்ள மாட்டாமல் பலரும் தடக்கெடுக்குஞ் சைவசித்தாந்த விளக்கங்களைக் கேட்போர்க்கிதம் பயக்கும் பாணியில் அநாயாசமாகப் பிரசங்கிக்குஞ் சாதுரியம் வாய்ந்தவர். சிதம்பரத்தில் இடம் பெற்ற சைவசித்தாந்த மகா சமாசத்து மகாநாடொன்றில் அவர் நிகழ்த்திய தலைமைப் பேருரை பல தடவை மீள் பிரசுரமாயதுண்டு. தமிழ்ப் புலமை நலங்கனிய அவரியற்றிய சகுந்தலை வெண்பா என்ற இலக்கியத்திலும் அவர்தம் சைவசித்தாந்த ஞான விளக்கம் இழையோடியிருத்தல் கண்கூடு. இந்திரனேவலின்படி மேனகை மானுட அழகியாய் ஆழ்ந்த தியானத் தபஸில் லயித்திருக்கும் கோசிகனை அணுகுகின்றாள், அந்நிலையில் அவள் பாதச் சதங்கையொலி கோசிகன் அகச் செவியில் கேட்கிறது. எங்ஙனம்? '' போதமவிழ் யோகம் புரிவோ ரகத்து முரல் கீதமென '' ( செய்யுள் 17 ) யோகத்திலோன்றிருப்பார்க்கு அவரவர் செவியிற் கேட்குமெனத் திருமூலர் முதலியோராற் கூறப்படும் ஓசை போல '' என்பதொன்று.

மேனகையின் சூழ்ச்சிக்குக் கோசிகன் இணங்கும் நிலையில் அவர்கள் கூட்டம் நேரும் வேளை எங்கும் மின்மினிகள், எப்படி? முன்வினையினீட்டங்கள் மூடிய போல், ( செய்யுள் 32 ) கோசிகன் காமாதுரமூர்த்தியாகிவிடுகிறான். தத்துவ நோக்கில் அதன் விளக்கம் எப்படி?

அகத்தி னொளிகாண் அறிஞர் உடனைந் திகத்தை வெறுத்தா ரெனினுஞ் - சகத்தைக் கருது முளங் கொண்டாற் காமற்கும் மேலாம் உருவடைவ தொன்றோ வியப்பு. செய். 38 )

இத்தகையது ஸ்ரீமான் நடேசபிள்ளையின் சைவசித்தாந்த ஞான விலாசம். உள்ளொளி பெற்றவர் உணர்வு, ஏதானுமொரு காரணத்தான் உலகமுகப்படுமாயின் அது சம்பந்தப்படும் விஷயம் அதிப்பிரபாவம் வாய்ந்த தாகவேயிருக்கும். அவ்வகையில் உள்ளொளி பெற்றோர் சம்பந்தப்படும் லோகக்ஷேம காரியங்களே உண்மைவிருத்தியுறும் என்பது சைவசித்தாத்த துணிபாகும். சொற்பகாலத்துள் மஹோன்னத விருத்தியுற்று வரும் யாழ். பல்கலைக்கழகம் இதற்கு அத்தாட்சியாகலாம்.



சேர். பொன். இராமநாதன் ஸ்ரீமான் நடேசபிள்ளை என்போரின் நன்மதிப்புப் பெற்ற ஒரு சைவசித்தாந்தியாய்த் திகழ்ந்தவர் ஏழாலை அருளானந்தசிவம் ( ஐ. பொன்னையா ) அவர்கள், ஏலவே வேதாந்த விசாரமுற்றிருந்து மேல் கடையிற் சுவாமிகள் பரம்பரையில் வந்த சடைவரத சுவாமிகளுக்குக் காட்பட்டதிலிருந்து சைவ சித்தாந்தியாய்த் திகழ்ந்தவர். ஆன்மவீறும் விழிப்புணர்வும் பொங்கச் சைவசித்தாந்தப் பொருளுண்மைகளைப் பிரசங்கிக்கும் பிரசங்க வல்லுனர். அந்நாளிற் சைவசித்தாந்த மேடையேறும் அறிஞர் சிலரிற் பிரபல்யமானவர். தமது குருவின் ஸ்தாபனமாகிய ஏழாலை மடாலயத்தை இடமாகக் கொண்டிருந்து அதன் பண்புக் கேற்கக் குருபூசை, சிவனடியார் பூசையாதியன நடத்திவந்ததோடு தமது மரபுச்குரிய வைத்திய மேன்மை கருதிப் பரராஜசேகரம் முதலிய வைத்திய நூல்களையும் ஆராய்ந்து வெளியிட்டவர். அத்துடன், கலாவல்லி என்ற சமய சஞ்சிகையும் நடத்தி வந்தவர். உள்ளுருக்க உணர்வெழுச்சியோடு புராணப் பயன் விரிக்கும் பண்பால் யோக சுவாமிகள் நினைவிலும் இடம் பெற்றவர். ஆன்மநேயம் மிக்கவர். பலராற் குருவாக மதிக்கப் பெற்றவர். கொழும்புத்துறைச் சுப்பிரமணிய ஐயரின் ஆன்ம விசாரம் என்ற ஒப்புயர்வற்ற நூல் இவருடைய மதிப்புரையோடு வெளிவந்திருக்கின்றது. தெல்லிப்பளைச் சிவானந்த ஐயரின் புலியூர்ப் புராணமும் தமது முன்னுரை சகிதம் இவராற் பிரசுரிக்கப்பட்டுள்ளது. திருத்தொண்[illegible] வழிக்கை நூலாகக் கொண்டிருந்த அவர் வழிபாட்டுப் பேறாகக் குறித்த மடாலயத்தில் சமயாசாரியர் நால்வர் கோயிலும் அமைந்து சிறப்புற்று வருதல் கண்கூடு.

ஞானதீஷைப் பெயராக வாய்ந்த அருளானந்தசிவம் என்னும் பெயரும் பூண்ட இவரின் வேத சாஸ்திரங்கள் பற்றிய நோக்கு அவை பற்றிய செந்திநாதையரின் நோக்குக்குச் சமமானது. பின்வரும் பந்தி கவனிக்கத்தகும்.

முக்கிய உபநிடதங்கள் எல்லாஞ் சைவசித்தாந்தப் பொருளை நுவல்வனவே. சொற் சுருங்கியும் பொருளாழ்ந்துமுள்ள சூத்திரங்களாகும் வேத மந்திரங்களின் இருதயத்தை உபநிடதங்கள் பிராமணங்கள் முதலியன கொண்டே அறிதல் கூடும், அவையெல்லாஞ் சைவசித்தாந்தப் பொருள் நுவலுவனவே என்ற உண்மை, சொல் ஒரு புறமும் பொருள் ஒருபுறமுமாயுள்ளனவும் ஒன்றினோடொன்று பெரிதும் மாறு

பட்டுக் குழப்பம் விளைப்பனவாயுமுள்ள பாடியங்களைத் தவிர்த்து அவற்றின் மூலங்களாயுள்ளவற்றை மட்டும் படிப்போர் தெளிவாகக் காண்பர் – என்பது அப்பந்தி.

உபநிடதப் பொருள் சைவசித்தாந்தப் பொருண்மைக்கு நேருக்குநேர் பொருந்தக் காட்டும் விவேகத்தில் திரு விசுவநாதன் கூர்மையினுஞ் சிறந்த கூர்மை திரு. ஐ. பொன்னையா அவர்களிடம் விளங்கியதற் கத்தாட்சியுண்டு. திரு. விசுவநாதன் ஆங்கிலத்திற் செய்தது போலவே சுவேதாஸ்வதரம் அதர்வசிரஸ், அவர்வசிதை, காவாச்கினருத்திரம் என்பவற்றைத் தமிழில் மொழிபெயர்த்துச் சைவசித்தாந்த விரிவு விளக்கஞ் செய்யும் ஆர்வத்தினால் வயசு பின்னிட்ட காலத்திலும் இளமாணவன் போலிருந்து ஓரிருவருடங்களிற் சமஸ்கிருதங் கற்றுத் தேறி அப்பணியில் முனைந்துள்ளார். ஆயிரத்துத்தொளாயிரத்து நாற்பத்து மூன்றில் முதலிற் சுவேதாஸ்வதரத்தை மொழிபெயர்க்கத் தொர்டங்கி இந்து சாதனப் பத்திரிகை மூலம் தொடர்ந்து வெளியிட்டு வந்தார். (முதற் கட்டுரையில் முன்னுரையாயமைந்த பகுதியிலிருந்தே முன்னைய பந்தி தழுவப் பட்டுள்ளதாகும்.)

சுவேதாஸ்வதரத்து முதலாம் அத்தியாயத்து முதன் மந்திரம் 'கிம் காரணம் ப்ரஹ்ம' என்றுள்ளது. இவர் அதனை, காரணம் ப்ரஹ்ம கிம் என மாற்றிக் கூட்டி உலகுக்குக் காரணமாய பிரமம் எது என மொழிபெயர்த்துக் கொண்டு அது சிவஞான சித்தியார் முதற் சூத்திரத்து முதற்செய்யுளில், தருபவனொருவன் வேண்டும் என்ற பிரதிக்ஞைக்குச் சமானமாக உள்ளதாகக் கண்டு, அம்மந்திரத்தில் அமையும் மற்றைய நான்கு வினாக்களும் சித்தியார்ச் செய்யுளில், வருமுறை வந்து நின்று, போவதுமாதலாலே என்பதனாற் குறிக்கப்பட்ட ஐந்தொழில் உண்மை விளக்க நிற்பனவாகக் காட்டுந்திறங் கவனிக்கத்தகும். அது வருமாறு, எதிலிருந்து நாங்கள் தோன்றுகிறோம் – 'குதஸ் மஜாதா' என்பதனால் சிருஷ்டியும், எதனாம் - சீவித்திருக்கிறோம் – 'ஜீவாம கேன' – என்பதனால் திதியும், எதில் ஒடுங்குகிறோம் – 'க்வ சம்ப்ரதிஷ்டா' – என்பதனால் சங்காரம் அநுக்ரஹம் என்ற இரண்டும், எதனாற் செலுத்தப்பட்டுச் சுகதுக்கங்களை அடைகிறோம் – அதிஷ்டிதா கேன சுகேதரேஷு வார்தாமஹே - என்பதனால் திரோபவமும் சூசிப்பிக்கப்பட்டன. எனவே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐம்பெருந் தொழில் செய்வது எதுவோ அதுவே உலகிற்குக் காரணமாகிய பிரமம் என்றவாறாயிற்று என்பது.



உலகுக்குக் காரணமென்ற பிரமம் எது? என்றெடுத்த வினாவுக்குரிய நேர்விடை மற்றைய நான்கு வினாக்களுக்கும் உரிய விடைகளாற் புலப்படுமாறு வைக்கப்பட்டிருந்தல் குறித்துச் 'சூசிப்பிக்கப்பட்டன' என்றமை காண்க.

இனி, சிவஞான சித்தியாரில், உலகம் தன்னியல்பானே தோன்றியழியும் ஆதலால் (ஸ்வபாவம்) இயற்கையே பிரமம் என்னும் உலகாயதர் கருத்தும் உலகம் கால இயக்கத்தில், தோன்றியழிதலின் காலமே பிரமம் எனும் காலேசுவரவாதிகள் கருத்தும் உயிர்களின் கன்மங் காரணமாகவே உலகந் தோன்றியழிதலின் கன்மமே பிரமம் என்னுங் கர்மவாதிகள் கருத்தும் போல்வன சித்தியார் 23, 26, 29, 30 ஆம் செய்யுள்களில் எடுத்துக் காட்டி மறுக்கப்படுமாற்றுக்குச் சமானமாக, இவ்வுபநிடதத்தில் இரண்டாம் மந்திரப் பொருள்நிலை இருத்தல் இவராற் சுட்டிக் காட்டப்பட்டிருக்கின்றது. திரு. விசுவநாதனும் இவர் போக்கையொட்டியே முதலாம் மந்திரத்துக்கு விளக்கந் தந்துள்ளாரெனினும் இரண்டாம் மந்திரத்தில் 'ஸ்வபாவம்' என்பதற்கு இயல்பு என்ற இயல்பான நேர்பொருளைவிட்டு 'கலை' என்ற பொருள் கொண்டுள்ளமையை மேலே அவர் பற்றிய பகுதியிற் கண்டோம். இம்மந்திரங் குறிப்பது வித்தியாதத்துவங்களை எனத் தெரிக்கும் நோக்கில் அவர் அது செய்வாராயினர். திரு. க. வச்சிரவேல் முதலியாரும் அதனை ஆதரித்துள்ளமை, a study of swetaswahara upanisad என்ற இவர் நூலுக்கு அவரளித்துள்ள மதிப்புரையானறியப்படும். (Page iii மேற்படி நூல்). ஆனால், திரு. ஐ. பொ. அவர்கள் சிவஞானசித்தியார்ப் பொருள் வைப்பு முறைக்கேற்குமாறு 'ஸ்வபாவம்' என்பதற்கு 'இயல்பு' என்ற இயல்பான நேர்ப் பொருளே கொண்டு அம்மந்திரத்தில் வரும் பூதானி, யத்ருச்சா காலம் ஆதியவற்றுக்கும் பொருந்துமாறு பொருள் விளக்கி இவ்வுபநிடதத்தின் முதல் ஐந்து மந்திரங்களின் பொருள்களுக்கிடையிலான அந்தரங்கத் தொடர்பைப் பின்வருமாறு தெரிவிப்பர்.

உலகத்திற்குக் காரணமாகிய பிரமம் யாது? என்பது முதலியனவாக முதன் மந்திரத்திலெழுந்த வினாக்களுக்கு விடை கூற வேண்டி முதலில் கா்லேசுர வாதிமுதல் மாயாவாதி ஈறாகவுள்ள சமயவாதிகள் தனித்தனி காரணமென்று கூறும் காலம் முதல் ஆன்மா இறுதியாகவுள்ள பொருட்கள் காரணமாக மாட்டாவென இரண்டாம் மந்திரத்திற் காரணங்காட்டி மறுத்

தொதுக்கிற்று. பின் பிரமம் உலகப் பொருட்கள்போல ஆராய்ச்சி அறிவினால் அளந்தறிதற் கெட்டாததென்பதையும் கொண்டு அதைக் காண்டற்கு வழி கூறுதல் வாயிலாகத் திருவருட்சத்தியினுண்மை மூன்றாம் மந்திரத்திற் காட்டப் பட்டது. முதல்வன் செய்யும் ஐந்தொழிற்குத் திருவருள் வடிவான அப்பராசக்தி துணைக்காரணம் என்பதை அடுத்து வரும் நாலாம் மந்திரம் சக்தியை ஒரு சக்கரமாக உருவகித்துக் காட்டுதல் மூலம் நன்கெடுத்து விளக்கிற்று. ஐந்தாவதாகிய இம்மந்திரம் அச்சக்தியினால் நிகழும் ஐந்தொழிற்கட்படுமுயிரை ஓர் நதி ரூபமாக வர்ணித்து அதனால் அது தூல சித்தாய்ப் பரதந்திரப்படுமியல்புடைய தென்றும் அங்ஙனமாதலால் உலகிற்கு காரணமாதல் பொருந்தா தென்றும் அறிவுறுத்தி மேல், உலகிற்குக் காரணமாகிய பிரமம் கூறிப் போந்த சித்துஞ் சடமுமாகிய இரண்டுக்கும் வேறானது என்பதும், அங்ஙனமறிதலால் விளையும் பலன் அது என்பதும், வரும் மந்திரங்களில் உணர்த்தப்படு கின்றன என்பது.

இங்ஙனம் ஆராய்ச்சியுணர்வும் தீர்ந்த நோக்கும் பிரதிபலிக் குமாறு அமையும் இலர்தம் சுவேதாஸ்வரத உபநிடத வியாக்கி யானம் இடமிடந்தோறும் திருமுறை மேற்கோள்களைப் பரக்கச் செழிக்கக் கொண்டுள்ளது. பிரசித்தி பெற்ற சைவசாஸ்திங்களின் நுண்பொருட்கூறுகள் ஏறக்குறைய அனைத்துமே இவ்வியாக்கி யானத்தில் இடம் பெறுதலால் அனைத்துச் சைவசிந்தாந்த சாஸ்திரங்களினதும் சாராமிர்தம் எனவுந்தக்கது இவ்வியாக்கி யானமாகும். கற்பவர்கள் சைவசித்தாந்த உண்மை விளக்கம் பெறுதலுடன் சைவசித்தாந்தக் கருத்துக்களைச் செட்டாகச் சிக்கனமாகத் தர்க்கரீதியாகப் பிரயோகிக்கும் வகையையும் அறிதற்குதவுவதும் இதன் பண்பெனலாம்.

வியாக்கியான ஆரம்பத்திற் குறிக்கப்பட்டுள்ளதற்கமைய இவ்வியாக்கியான முடிவில் தொடரவிருந்த மறு உபநிடத வியாக்கியானங்கள் ஆரம்பித்தற் கிடையில் அவர் வாழ்வில் நிலையாமை குறுக்கிட்டு விட்டமையால் யாம் சைவசித்தாந்த அறிவியல் விருத்திக்கு அவற்றின் சார்பிலாம் பேறு கிடையா தாயிற்றென்க.

திரு. ஐ. பொன்னையா அவர்களின் சைவசித்தாந்த ஞான விலாசத்தால் ஈர்க்கப்பட்டவர்ளுள் முதன்மையானவர் திரு. மு. ஞானப்பிரகாசம் அவர்கள். கருவிலே திருவுடையராய்த் தோன்றி இளமையிலிருந்தே சைவப்பண்பாடும் உயரறிவு நாட்டமும் ஆன்றோர் விசுவாசமும் கொண்டு விளங்கிய இவர் ஆங்கிலக் கல்வியில் முன்னேறிக் கலையும் விஞ்ஞானமு மெனும் இருதுறைப் பட்டதாரியான போதும், தமிழ் சமஸ் கிருதம், சைவசித்தாந்தம் என்ற மூன்றில் மட்டும் இதயம் வைத்துணர்ந்து தேறி உயர்ந்தவர். ஆன்மீக விருத்திக்கின்றி யமையாத தமிழ்ப் பண்பாட்டுணர்வும் சைவ ஞான வேட்கையும் பொங்கிச் செழிக்க இருந்த இவர் நிலை, திரு. ஐ. பொ, அவர்களின் கருணை நோக்கும் அத்யாத்மிக ஞான விளக்கமும் இவர்பால் வியாபித்தற் இடமளிப்பதாயிற்றெனலாம். அவர்க்கு ஆத்மீக நிலையமாயிருந்த ஏழாலை மடாலயமே இவர்க்கும் ஆத்மீக நிலையமாயிற்று, அவர்க்கு வாழ்க்கை நூலாயமைந்த பன்னிரு திருமுறைகளே இவர்க்கும் வாழ்க்கை நூல்களாயின. அவர் கைக்கொண்டிருந்த மடாலய சேவையும் சிவனடியார் சேவையும் பரோபகார கைங்கரியங்களுமே இவர்க்கும் உகந்த சேவையும் கைங்கரியங்களுமாயின. அவர் உயர்வில் உயர்வாகப் பேணிய சமயாசாரியார் மகிமையே இவர்க்கும் உயர்வி லுயர்வாகப் பேணும் மகிமையாயிற்று. அவரது நன்மதிப்புக்குப் பாத்திர மாயிருந்த சேர். பொன். இராமநாதனும் ஸ்ரீமான் சு. நடேசபிள்ளையுமே இவர் தன்கு — மதிப்புக்குமுரியராயினர். அவர் காலத்துக்குப் பின் பிரசித்தி பெற்ற திருக்கேதீச்சரத் திருப்பணிச் சபைத் தலைமையில் தாமே திருப்பணி மயமாய்த் திகழும் பண்பு இவர்க்குப் பிரத்தியேகமானதொன்று.

ஏழாலை மடாலயத் தொண்டுகளிலும், பரமேஸ்வரக் கல்லூரி ( இன்றைய பல்கலைக்கழகம் ) அபிவிருத்தித் தொண்டு களிலும் திருக்கேதீச்சரத் தொண்டுகளிலும் தலைமைத் தொண்டனாயுயர்ந்திருக்கும் பாங்கால் இவரிடம் ததும்பும் சைவசித்தாந்தங்களை, படிப்பறிவாராய்ச்சிகள் எதுவும் எட்ட முடியா அளவுக்கு யாழ் சைவசித்தாந்த மேதாவிலாசத்துக் குபகரித்து வருதல் கண்கூடு. திரு. மு. ஞானப்பிரகாசம் சைவ சித்தாந்த உண்மைகளை உணர்வுருக உணர்ந்துணர்த்தும் ஆற்றலும் சிக்கனமும் செறிவும் மிக்க வசனக் கோப்பில் ( விசேடமாக ஆங்கிலத்தில் ) எழுதும் திறனும் வாய்ந்தவர். எழுத்துருவில் வெளிவந்த அவர் நூல்கள் ஒன்பது வரை கிடைக்கக்கூடியனவாயுள்ளன.

1. ஈசாவாஸ்ய உபநிடத மொழிபெயர்ப்பு
2. தமிழர் சித்தாந்தம் – பரமேஸ்வரக் கல்லூரி இலட்சிய ஜயந்திமலர்.
3. வேதாகமங்கள்
4. The Spritual Teacher அகில உலக இந்து மகாநாட்டுப் பிரசுரம்.
5. Unity is our heritage
6. கர்ம யோகம் – Ramanathan study centre publication
7. Tat Purusha – The ageless Spirit ( Included with ) The Key of knowledge by sir. Pon. Ramanathan
8. Thamilakam & Saiva Thought.
9. Sankya Thought – A Saiva view Point, Texts of Ramanathan memorial lecture.

திரு. மு. ஞானப்பிரகாசம், நடைமுறை வாழ்விற் சைவம், 'திரகரண அரவணைப்பிற் சைவசித்தாந்தம்', கற்ற தனாலாய பயனென் கொல் வாலறிவன் நற்றாள் தொழா அரெனின் என்பவற்றின் இலட்சியார்த்தம் நன்கு விளங்க விளங்குமொருவர் எனல் அமையும். பரமேஸ்வரன் ஆலயத்தை மையத்தானமாகக் கொண்டு நிலவும் பராமஸ்வரக் கல்லூரி வளாகத்தில் இந்நாளிற் பொங்கியெழும் புதுமலர்ச்சிப் பொலி வுக்குப் பின்னணியாயமைந்த தார்மிகப் பண்பின் ஒருபாகம், திரு. இராமநாதன் சார்பிலும் கல்லூரி சார்பிலும் இவர் கொண்டிருந்த அப்பழுக்கற்ற பக்தி விசுவாச விளைவெனல் மிகையாகாது என்பர்.

பரமேஸ்வரக் கல்லூரிச் சூழலுக்கு இரண்டாவதாகச் சைவ, சைவசித்தாந்த ஞான விருத்திக் கமைவான சூழ்நிலையோடு விளங்கியது. சைவவித்தியா விருத்திச் சங்கம் தாபித்த திருநெல் வேலிச் சைவாசிரிய கலாசாலை, அதில் நெடுங்கால உப அதிப ராய் விளங்கிய திரு. பொ. கைலாசபதி, தலைமைத் தமிழ்ப் பண்டிதராய் விளங்கிய பண்டிமணி சி. கணபதிப்பிள்ளை இருவரும் தனித்தனியாகவும் கூட்டாகவும் சைவசித்தாந்த ஞான விளக்கத்துக்கு உபகரித்து வந்துள்ளார்கள். திரு. பொ. கை. அவர்கள் மௌனதவமுனிவர் எனப் பிரசித்தமாக அறியப்



பட்ட தம்நிலைக்கேற்பச் சதா தியானத் தனிமை நிலையிலிருந்து அவ்வப் போது தம் உள்ளுணர்விற் கண்ட ஞான விளக்கங் களை அண்டியணுகுவார்க்கு உணர்த்தி வந்துள்ளார்கள். சைவ சமயமே சமயம், சைவசித்தாந்தமே சித்தாந்தம், வேத நூல்வழி வந்த உண்மைகளே மாசு மறுவற்ற தூய உண்மைகள் என்றிங்ஙனம் அவர்தம் உள்ளுணர்வாற் கண்டுணர்த்திய உண்மைகள் யாழ். பாரம்பரிய சைவ, சைவசித்தாந்த உணர்வு களுக்கு உறுதியளிப்பனவாயுள்ளன.

ஆழ்ந்தகன்ற தமிழ்ப் புலமையும் தமிழன்பினோடபிமானமும் இரசனையுணர்வும் பல்கத் திகழ்ந்த பண்டிதமணியவர்கள், 'அறம் பொருளின்பம் வீடமைதல் நூற்பயனே' காமஞ்சான்ற கடைக் கோட்காலை. . . . சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே என இங்ஙனம் வாழ்விலட்சியத்தை வரையறுத்துணர்த் தும் தொல்காப்பிய ஆளுமைக்குட்பட்டதான தமிழிலக்கியம் வெறுமனே கலைப்பண்டமாதல் சாலாது. தொல்காப்பியம் முன்வைக்கும் வாழ்விலட்சியப் பயனோடொட்ட அது விளக்கம் பெறல் வேண்டும் என்ற உணர்வுறுதி படைத்தவர். அந்நோக்கில் உபஅதிபர் திரு. பொ. கை அவர்களின் உள்ளுணர்வுக் காட்சி உண்மைகளையும் உசாவித் தெளிந்து கொண்டு, தமிழிலக்கியத் தின் அகத்திணைப்பகுதி விசேடதரமாக வாழ்விலட்சியப் பயனான ஆன்மவிடுதலையுணர்த்துங் குறிப்பினதாதலைச் சந்தர்ப்பம் நேரும் போதெல்லாம் தமது பேச்சாலும் எழுத்தாலும் பிரதி பலிக்க வைத்துள்ளார். திரு. சி. க. அவர்கள். அவர்களுக்கென அமைந்த சாரீர இனிமையும், உள்ளுங் கருத்துக்களை உணர்ச்சி வழுவாமல் அர்த்தப்பிடிநழுவாமற் பேணி வெளிப்படுத்தும் அவரின் பிரத்தியேகமான உரைநடை உத்திகளும் அவர் நோக்குச் சர்வசன மட்டத்தில் விளக்கமுறப் பெருமளவில் உதவுவனவாயின.

திரு. பொ. கை அவர்களின் தத்துவ சிந்தனைகள் அவர் வாய்க் கேட்டோர் மூலம் கைலாசபதிஸ்மிருதி, கைலாசபதி சிந்தனைகள் என இருதொகுதிகளாக வெளிவந்துள்ளன. அவற் றுள் ஸ்மிருதி புதியதொரு கோணத்திற் சைவசித்தாந்த உண்மை களை அணுகும் ஒரு முறையில் அமைந்துள்ளது. மறு நூலாகிய 'சிந்தனைகள்' ஆத்மிகத்துக்குப் போல் லௌகிகத்துக்கும் இன்றி யமையாத அறிவுரைக் களஞ்சியமாயுள்ளது.

பண்டிதமணியின் நூலாக்கம் பரந்துபட்ட அளவினது. இனி விமர்சனம் வேண்டாமென்கிற அளவுக்குப் பிரசித்தி பெற்றுள்ளது. இலக்கிய இரசனை நூல்களை விடச் சமயசிந்தனைகள், திருக்கோயில் என்ற சமய நூல்களும் பிரசித்தமானவை. அவர் அறிவியல் மேதையின் முதிர்ச்சி காட்டும் அன்பினைந்திணை, அத்வைத சிந்தனை என்ற இரண்டும் சமீபகால வெளியீடுகள், முன் குறிப்பிட்டவாறு தமிழ் அகத்திணை இலக்கிய இன்பத்துக்கும் அதன் இலட்சியப் பயனான ஆன்மீக விடுதலைப் பேற்றின்பத்துக்கும் இடையிலான அந்தரங்க இயைபு பற்றிய அவர் ஆய்வுச் சிந்தனைகளின் சிகரமாகத் திகழ்பவை இன்நூல்கள்.

கைலாசபதி ஸ்மிருதி, பண்டிதமணியின் அத்வைத சிந்தனைகள் எனுமிவ்விரண்டும் யாழ் சைவசித்தாந்த அறிவியல் அரங்கிற் புதுமுகங்களாக வரவேற்கப் பெற்றுள்ளன. குறித்த அறிவியல் மேதைக்கு இவை உபகரிப்பது சார்பான விபரம் ஆன்றோர் ஆய்வில் இருந்து வருதல் கண்கூடு.

1. சித்தாந்த சைவ சங்கிரகம். வி. வேலுப்பிள்ளை கோப்பாய் யாழ் விவேகானந்த யந்திரசாலை. கலி 5001
2. சைவ சித்தாந்த சங்கிரகம் — யாழ் மேலைப் புலோலி சுத்தாத்துவித சைவசித்தாந்த போதகாசிரியன். வ. கார்த்திகேயபிள்ளை. சிதம்பரம் விநாயக சுந்தர விலாசம் பிறஸ். 1908, இவ்விரு உரைநடை நூல்களும் யாழ்ப்பாண அறிவிற் சைவசித்தாந்தம் பெற்றிருந்த அர்த்தத்தை அறிவிக்குந் சாதனங்களாம்.

இவ்வநுபந்தத்தில் இடம் பெறாதவர்களும் யாழ் சைவ சித்தாந்த அறிவியல் மேதைக்கு உபகரித்துள்ளவருமான மற்றுமுள்ளோர் மகிமைகளும் சிந்தனை வகையால் அநுவதித்துக் கொளற் பாலனவாகும்.

சுபம்

# திருவாட்டி லீலாவதி இராமநாதன் நினைவுப் பேருரை — 1994

## சைவசித்தாந்த விளக்க விருத்தியில் யாழ்ப்பாண அறிவியல் மேதையின் சுவடுகள்

நமக்கெட்டக் கூடுமளவில், சைவசித்தாந்த விளக்கச் செழிப்புக்குபகரித்துள்ள யாழ். அறிவியலாளர் நிரலில் முன்னவராக அறியப்படுபவர் திருநெல்வேலி ஞானப்பிரகாசர். கிரகணதோஷம் பிடித்தது போல யாழ். சைவவியல் வாழ்வைப் போத்துக்கேயர் வல்லாட்சி ஆக்கிரமித்திருந்த 16 ஆம் நூற்றாண்டுக் காலமாகிய அப்பொல்லாத காலத்திலும் சைவஞானத்துக்கு ஒரு நல்ல காலம் இருந்ததென்னும்படி[1] புண்ணியசீலராய்த் தோன்றி யாழ். மழவர் குடிமரபில், சுயசிந்தனாவலுவுள்ள ஒரு உத்தாரண புருஷரான சைவசித்தாந்தஞானியாய்த் திகழ்தற்கு முன்னோடியான தகைமைகள் விளங்கத் திகழ்ந்தவர் இவர் என்பர். பசுக்கொலைப் பழிக்குத் தாமும் ஆளாகும்படி நிர்ப்பந்திக்கப்பட்டிருந்த ஒரு சூழ்நிலையில் இருந்து தம்மைத் தப்பவைத்துக்கொள்ளுமாறு இரவோடிரவாக இந்தியாவைச் சென்றடைந்துவிட்ட இவர், அங்குள்ள ஆன்மஞானிகளின் சேர்க்கையால் ஆன்ம விழிப்புற்றுச் சிவாகமக் கலைவல்லுநராய்ச் சித்தாந்தஞான வித்தகராய்த் திகழ்கையில், வடமொழிச் சிவஞானபோதத்திற்குச் சம்ஸ்கிருதத்தில் ஒரு விருத்தியுரையும் தமிழ்ச் சிவஞானசித்தியார்க்குத் தமிழிலோர் விளக்கவுரையுங் கண்டவாற்றால் சைவசித்தாந்த அறிவியல் விளக்கத்திற்கு இரு மொழிவாயிலாகவும் உபகரித்துள்ளார். அவரது இவ்வுரைகள் சைவசித்தாந்தஞானம் சிவாகமப்பின்னணி கொண்டதெனும் உண்மையைப் புதுப்பசுமை மங்காமற் புலப்படுத்துபவை.

சைவசித்தாந்த சாஸ்திரங்களில் நேரடியாகத் தலையிட்டு உரைவிளக்கஞ் செய்த ஈழத்து முதல் அறிஞர் என்ற புகழ்மையும் சிவஞானசித்தியார் உரையாசிரியர்களில் மூன்றாமவர் என்ற கணிப்பும் இவரைச் சாரும். முப்பொருள் உண்மைவிளக்கத் தெளிவை ஏற்படுத்திச் சைவசித்தாந்த அறிவாராய்ச்சியைப் பரிமளிக்க வைப்பதிற் சிவாகமங்களின் பங்கெவ்வளவு, சிவாகமக் கல்விக்கின்றியமையாத சம்ஸ்கிருத மொழியறிவின் பங்கெவ்

வளவு என்பதைப் பிறரெல்லாம் தீவிரமாகச் சிந்திக்க வைக்கும் பாங்கில் அமைந்தவை இவருரைகள்.[2] இவரது தமிழுரை நடையிலும் சம்ஸ்கிருதச் சொற்களும் சொற்றொடர்களும் வெகுலாவகமாகப் பயின்று வருதல் காணலாம்.

குறித்த சித்தாந்த நூலுரைகளன்றியும் சிவாகமப் பின்னணியிற் கிளைத்துத் தருக்கவியற் கௌரவத்தோடு விளங்கும் பெருநூல்கள் ஒன்பது, சம்ஸ்கிருத மொழியிலேயே இவரால் இயற்றப் பெற்றுள்ளன. அவற்றுள் மூன்று சிவாகமப் புதையலாயுள்ள சிவயோகம் பற்றியவை. சிவயோகசாரம், சிவயோகரத்தினம், பிராசாததீபிகை என அம்மூன்றும் பெயர் பெறும். இம் மூன்றினுள் சிவயோகரத்தினம் என்ற நூல் அண்மைக்காலத்திற் புதுச்சேரியிலுள்ள பிரான்சிய ஆகமாராய்ச்சி நிறுவனத்தினால்[3a] மறுபிரசுரம் செய்யப்பெற்றுள்ளது.[3b] ஏலவே 1928 இல் சிவயோகரத்தினம், சிவயோகசாரம் எனும் இரு நூல்களும் யாழ். பருத்தித்துறை, சிவஸ்ரீ முத்துக்குமாரசுவாமிக் குருக்களால் பரிசோதிக்கப்பெற்று, நல்லூர், த. கைலாசபிள்ளையால் பருத்தித்துறை, கலாநிதி அச்சியந்திரசாலையில், இரண்டும் ஒரே கட்டத்திற் பிரசுரமாகியுள்ளன.

பௌஷ்கராகம விருத்தி, சித்தாந்த சிகாமணி, சிவாகம அதிமான்யசங்கிரகம், அஞ்ஞானவிவேசனம், பிரமாணதீபிகை, ஓமாத்திரிகல்பம், பௌஷ்கராகம விருத்தி என்பன இவரது ஏனைய சம்ஸ்கிருத நூல்களாகும்.[4] இந்நூல்களில் ஒன்வொன்றும் பிரமாணிக்யமான மூலாகமக் கருத்துக்களைக் கொண்டவை. இவற்றிற் பதினைந்திற்கும் அதிகமான மூலாகமங்களை இவர் எடுத்தாண்டுள்ளார் என்பர்.[5] இந்த ஞானப்பிரகாசர் பிரசித்தி பெற்றவொரு நிஷ்டாநுபூதிமானுமாவார். சிவயோக நிஷ்டையிலிருந்தவாறே அதன் விளைவாகிய அருட்சித்தி மூலம் பாரிய நீர்த்தேக்கமாகிய சிதம்பரம் ஞானப்பிரகாசர் திருக்குளப் பணியும் தம் ஆன்மார்த்த நிலையமான சிவகாமியம்மன் கோயில் திருப்பணியும் நிறைவுறப் பெற்றுக்கொண்டவர் என்பது வரலாற்றுண்மை. சிவஞானசித்தியார்க்கு அவர் கண்டுள்ளவுரையும் சிவயோகக்காட்சியுண்மைகள் நிரம்ப இழையோடப் பெற்றிருக்கக் காணலாம். நூலில்வரும் அளவையியல் ஏழாஞ் செய்யுள் தரும் தன்வேதனைக்காட்சி, யோகக்காட்சிகளை விளக்குகையில், மற்ற உரைகாரர்யாருஞ் செய்யாதவகையில் தன்வேதனைக் காட்சியிலிருந்து யோகக்காட்சி பரிணமித்தெழும் விதத்தை அவர் விளக்குந்திறமும்[6] முதலாஞ் சூத்திரத்து 31 ஆம் செய்யுளில் வரும், 'கற்ற நூற்பொருளுஞ் சொல்லும் கருத்தினிலடங்கித் தோன்றும் பெற்றி,' 'சாக்கிராதி உயிரினிற் பிறந்தொடுக்கமுறுதல்' என்பவற்றை அவர் விளக்குந் தெளிவும்[7] 9 ஆம் சூத்திரத்து 7 ஆம் செய்யுளில், சோஹம், சோயம், சிவோஹம், சிவமிதம் என்பவற்றை இனங்காட்டும் விதமும்[8] போல்வன இவ்வுண்மைக்கு ஆதாரமாம்.



சித்தசிவயோகி, சாத்தியசிவயோகி, சிவசாதி குறித்த சிவபாவனை, சிவப்பொருள் மாத்திரங் குறித்த சிவபாவனை, இருபா சம்சித்தபஞ்சகிருத்தியகர்த்திருத்வம், அவர்சனீய சம்சித்த பஞ்சகிருத்திய கர்த்திருத்வம், சாதிமான், சாக்ஷாத் காரவான் என்றாற்போல நுண்பொருள் நிலைகளுள் நுணுகிநுணுகிப் பகுத்துக் காணும் அவரது அகமுக விருத்தி துல்லியமானது.[9] இத்தகைய நுண்ணாய்வுக்குச் சூக்குமவிசாரம் என்ற பெயர் வழக்கு அவராலேயே கொடுக்கப்பட்டிருக்கக் காணலாம்.[10]

## ஞானப்பிரகாசர் சிவசமவாதி

முத்திநிலையில் ஆன்மாவுக்குஞ் சிவத்துக்குமிடையிலான இயைபுபற்றிய கோட்பாடுகளிற் சிவசமவாதம் என்பதும் ஒன்று. குருவருளாற் பாசநீக்கம் பெற்றுச் சிவோஹம் பாவனையினால் ஏகனாகி இறைபணி நிற்கும் ஆன்மா, சர்வ பாவங்களினாலும் சிவனுக்குச் சமமான ஒரு நிலையிலிருக்கும் என்பது இதன் விளக்கமாம். இக்கோட்பாட்டுக்கும் சிவாகம சம்மதமுண்டென்பர்.[11] ஏலவே 8ஆம் நூற்றாண்டளவில் எழுந்த அஷ்டப் பிரகரண நூல்களில் ஐந்தின் ஆசிரியரான சத்தியோஜோதி சிவாசாரியர், மிருகேந்திர வியாக்கியான கர்த்தரான நாராயணகண்டர், 12 ஆம் நூற்றாண்டில் போஜதேவரியற்றிய தத்துவப்பிரகாசிகைக்கு உரைசெய்த அகோரசிவசாரியர் என்ற சம்ஸ்கிருத மொழிமூல சித்தாந்த ஆசிரியராலும் சிவஞானசித்தியார்க்கு முதலில் உரை எழுதிய மறைஞானதேசிகராலும் இக்கோட்பாடு தழுவப்பட்டுள்ளது.[12] போஜதேவரின் தத்துவப் பிரகாசிகையின் 6 ஆம், 7 ஆம் சுலோகங்களையொட்டி அகோரசிவாசாரியர் இக்கோட்பாட்டை நிறுவுகின்றார். முக்தாத்மனோபி சிவா[13]:- முக்திபெற்ற ஆத்மாக்களுஞ் சிவங்கள். "அபி" என்ற மிகையால் வித்தை வித்யேச்வரபதவி நிலையடைந்த ஆன்மாக்களுஞ் சிவமாம் என 6ஆஞ் சுலோகத்தின் சார்பில் விளக்கந்தரும் சிவாசாரியர் அடுத்துவரும் ஏழாஞ் சுலோகத்தில், சிவன் பஞ்சகிருத்தியஞ் செய்பவர் எனவருங் கருத்தையொட்டிச் சிவங்களென மேற்கூறப்பட்ட முக்தான்மாக்களும் சிவனாற் பிரேரிக்கப்

பட்டுப் பஞ்சகிருத்தியஞ் செய்வர் எனக் குறிப்பிட்டுள்ளார். முற்சுலோகத்தில் வந்த 'அபி' என்ற மிகையால் தழுவப் பட்டுள்ள அஷ்டவித்யேச்வரர்கள், தம்மால் ஆசிரயித்திருக்கப் படும் சதாசிவரின் சுத்தமாயா பஞ்சகிருத்தியங்களுக்கு உதவி யாளர்களாக இருப்பரெனவும் அச்சதாசிவர் மகேசுர புவனத்தைச் சேர்ந்த அநந்தேச்வரர் மூலம் அசுத்தமாயா பஞ்சகிருத்தியம் நிகழ்விப்பாரெனவும் கூறும் சிவாகம சுலோகங்களை அவர் ஆதாரங்காட்டித் தம் கோட்பாட்டை உறுதிப்படுத்துவர்.[14]

சம்ஸ்கிருத மூலம் சைவபரிபாஷை முதலிய நூல்களும் சங்கரபாஷ்யம் வடமொழிச் சிவஞானபோத விருத்தி முதலிய உரை நூல்களும் தமிழ் மூலம் சிவநெறிப்பிரகாசம் என்னுஞ் சித்தாந்த நூலும் சிவஞானசித்தியார் உரையுஞ் செய்துள்ள சிவாக்கிரயோகிகளும் தமிழில் சிவஞானபோத மாபாடியம் இயற்றிய சிவஞானமுனிவரும் பிறரும் இதைக் கண்டித்து ஒதுக்குவர். அவருள் ஞானாவரணீய விளக்கம் என்ற நூலுக்கு உரைசெய்த வெள்ளியம்பலத் தம்பிரான் இக்கோட்பாட்டை வெகுவாக விமர்சித்து முடிவில், அகோரசிவாசாரியர்பால் தமக்குள்ள நன்மதிப்பைக் கருதிப்போலும், அகோரசிவாசாரியர் இதனைப் பிறர் மதமென்று காட்டக் கூறியிருக்கலாமன்றித் தம் துணிபாகக் கூறியிருக்க முடியாதெனச் சொல்லியமைவர்.[15]

சிவாக்கிரயோகிகள் தமது சம்ஸ்கிருத நூலாகிய சைவ பரிபாஷையில் வைத்து இதனைத் தருக்கரீதியாக மறுப்பர். தமிழுரையாகிய சித்தியாருரையில் வைத்துக் காழ்ப்புணர்ச்சி பொங்கக் கண்டிப்பர். முக்தான்மா முத்திநிலையில் தான் சிவனுக்கு வேறாய்ச் சமனாய் இருப்பனெனில், சீவனென்றுஞ் சிவனில் தங்கியுள்ளதெனப்படும் அதன் இயல்பான இருப்புநிலை இலக்கணத்துக்கு மாறாகும். மேலும், முக்தான்மா சிவனுக்குச் சமமெனில், அச்சமத்துவம் பகுதிச் சமத்துவமா பூரண சமத்துவமா என்ற வினா எழும். பகுதிச் சமத்துவமென்பதாயின் அத்தகு சமத்துவம், அதாவது இரண்டுஞ் சித்து என்ற சமத்துவம் பெத்த நிலையிலும் இருப்பதே. ஆகையால் ஆன்மாவுக்குப் பெத்தநிலை சுத்தநிலைக்கிடையிலான வேறுபாடில்லாதொழியும். அதாவது இவ்விருநிலைக்கும் யாதாமொரு வேறுபாடுமில்லை என்று முடியும். இனி, அது பகுதிச் சமத்துவமன்று; முழுச்சமத்துவமென்பதாயின், அம்முக்தான்மா சிவனேயானான் என்றுவிடலாம்; சமமானான் என வேண்டிய அவசியமில்லை. ஏனென்றால், முழுமைச்சமத்துவம் பெறுகையில் சிவனுக்குரிய முற்றுணர்வு,



சர்வவல்லமை எல்லாமே ஆன்மாவுக்கு வந்துவிடும் ஆதலின்.[16] எனத் தமது சம்ஸ்கிருத மொழிமூலமறுப்பில் இவ்வாறுரைக்கும் சிவாக்கிரயோகிகள், தமிழ்மொழி மூலமறுப்பில் தெரிவிப்பது:

தீக்ஷையின் போது தனது உடல் பொருளாவி மூன்றையும் ஒருசேரச் சிவனுக்கு ஒப்புக்கொடுத்த ஆன்மா முத்தனான போது சிவனோடு சமத்துவம் பேணுவதெனில் அது தத்தாபகாரம் ( தந்ததை மீள வாங்குந் தீங்கு ) ஆய் முடியும். பந்த முற்றுக் கேவலநிலையிருந்த ஆன்மாவைக் காரணமற்ற தன் கருணையினால் பந்தம் நீக்கி முத்திபெறச் செய்த சிவனுபகாரத்தை எண்ணி அவருக்குத் தாசனாகாமல் ஆன்மா முத்தி நிலையிற் சமத்துவம் பேணுதல் க்ருதக்னதா ( நன்றிக்கொலை ) ஆய்விடும். இப்படிப் பாதகச்சார்பாகச் சிவசமத்துவம் பேசுவார் மூர்த்தாவில் அசனிபாதம்விழ (மூர்த்தா – தலை, அசனிபாதம் – இடிவிழுதல் ) எனக் காணப்படும்.[17]

இவ்வளவு மறுப்புணர்வுகளுக்கிடந்தரும் இச்சிவசமவாதக் கோட்பாட்டை ஞானப்பிரகாசர் நிறுவுந்திறம் இனிக் கவனிக்கத்தகும். அளவையியல் ஐந்தாஞ் செய்யுளின் சார்பில் சித்தாந்தப் பொருள்களின் தன்னியல்பு பொதுவியல்பு விளக்குந் தருணத்திலேயே பிறஉரைகாரர் எவருஞ் செய்யாத வகையில் இவர் முன்னேற்பாடாகவே முக்தான்மாவுக்குந் தன்னியல்பு பொதுவியல்பு வகுத்துக் கூறிவைத்துள்ளார்.[18] முக்தான்மாவைச் சிவனின் வேறுபடுத்தி அழைப்பதற்கு இவர் வழங்குஞ் சொல் ஆதி முத்த சிவன். இங்கு இப்பெயரில் அவர் கூறுவது வருமாறு; ஆதிமுத்த சிவனுக்குத் தன்னியல்பு – பசுபாசங்களாகிய அந்நிய சாதியையும் அநாதிமுத்த சிவன் அபரமுத்த சிவன்களாகிய தன்சாதிகளையும் அகன்று நிற்றல். பசுபாசங்களாகிய அன்னியத்தை நீக்கித் தன்சாதியாகிய அநாதிமுத்த ஆதிமுத்த சிவன்களுக்குச் சமமாகிச் சிவனென்றிருத்தல் பொதுவியல்பு – என்பது.

ஆறாஞ் சூத்திரத்துக்கெழுதிய உரைமூலமும் இவர் இதற்கு இவ்வடிப்படையிலேயே விளக்கந் தந்துள்ளார். விளக்கம் போகிற போக்கில், இதற்கு மறுப்பாக எழக்கூடிய ஆசங்கையை முன்னிறுத்தி அதற்கு விளக்கம் அளிப்பாராய் அவர் கூறும் பகுதி பின்வருமாறு:[19]

**ஆசங்கை**

நீர் சொல்வதெல்லாம் சரி. அது சூக்கும விசாரத்தினாலூகிக்கப்பட்டது. அதில் முக்தான்மாக்களுக்குச் சிவசம

சாமர்த்தியஞ் சித்தித்திருத்தலால் பஞ்சகிருத்திய கர்த்திருத்வங் காணப்பட்டது. இப்படிச் சகத்துக்கீசர் அநேகராகக் காட்டுதலால் நீர் அநேகேசுர வாதியானீர்.

**உத்தரம்**

சத்தியமே நீர் சாற்றியது. சிவன் தனது இலய போக அதிகார நிலைகளை அடையுமிடத்து முக்தான்மாக்களாலுமடையாதிருக்கப்படாது. சிவன் பஞ்சகிருத்தியம் பண்ணுமிடத்து முக்தான்மாக்களுக்கும் சுருக்கவியலாத வகையில் சிவசம சாமர்த்திய சங்கற்பங்களிருத்தலால் தங்கள், தங்கள் சக்தி சாமர்த்தியங்களைச் சுருக்கியொதுக்கி விலக்கிக்கொள்ள (வர்ச்சிக்க) முடியாதாகையால் பஞ்சகிருத்தியம் பண்ணுவார்கள். அதில் விசேஷம் ஏதெனில், முக்தான்மாக்களுக்குச் சித்திக்குங் கர்த்திருத்வம் அவர்சனீய (தவிர்க்கமுடியாத) சம்சித்த பஞ்சகிருத்திய கர்த்திருத்வம். சிவனுக்குக் கிருபாசம்சித்த (கருணையாற் கூடிய) பஞ்சகிருத்திய கர்த்திருத்வம். அதனால் நவமிதுவாகக் கடவது புராணமிதுவாகக் கடவது என்று பின்ன சங்கற்பம் (வேறுபட்ட சங்கற்பம்) இன்மையால் அநேகேசுரவாதத்துக்கு ஆஸ்பதமேயில்லை. (ஆஸ்பதம் - இடம்) சகத்கர்த்தாச் சிவனொருவனே. முக்தான்மாக்கள் சகத்கர்த்தாக்களாய் இருந்தாலும் பின்னசங்கற்பப் (சிவனிலிருந்து வேறுபட்ட சுயசங்கற்ப) பிரவிருத்தி இல்லாமையால் அவர்கள் சகத்கர்த்தாக்கள் அன்றென்று கொள்ளப்படும்.

"ஆரண உருவாந்தில்லை அம்பலங் காணப்பெற்றோர்
ஒருரு வாவரென்றும் ஒன்றுவ ரொன்றாரல்லர்
காரணராகார் ஒத்த கருத்தினர் நிருத்தஇன்பப்
பூரணர் அவர்கள்வாழும் புவனமும் பொதுவாம்அன்றே"

என்று கோவிற்புராணத்திலும்,

'எம்மையொத்திடும் சிவாநுபூதி முத்தி அம்பலத்திலுண்டாம்'

என்று திருவாதவூரர் புராணத்திலும் சொல்லப்பட்டது – என்பது விளக்கம்.[20]

இது கூறுவதென்னெனில், முக்தான்மா சிவசமமாயினும் சிவ ஆணை விரிவுக்கப்பால் இருப்பதில்லை. அதனால், சிவன் தன் பஞ்சகிருத்தியமியற்றுகையில் இவர்கள் அதிலிருந்து தம்மைத் தவிர்த்துக்கொள்ள முடியாத நிலையில் அது செய்பவர்கள் ஆவார்களே அன்றித் தாமாகவேதுஞ் செய்வாரல்லர். அத்தன்மையால் முக்தான்மாக்கள் பஞ்சகிருத்தியஞ் செய்வர்; அதனால் உலகத்துக்கு ஈசுரர் அனேகர் என்று எண்ணுதற்கிடமில்லை. அன்றியும் இவர்கள் சிவனாணையோடு பிரிவின்றி நிற்றலால் இவர்கள் செய்வதும் சிவன் செயலுக்குள்ளேயே அடங்கி அனைத்தும் ஒருமுதலாய்ச் சிவன் செயலென்றேயாகும். எனவே, சிவன் மட்டுமே பஞ்சகிருத்தியகர்த்தா என்ற பெயர்க்குரியவர். இவர்கள் அது செய்பவர்களே ஒழிய கர்த்தாக்கள் ஆகார் – என்பதாம்.

நியாயப்படியானதான ஆன்மாவின் முக்திநிலை இதுவென்கிறேன் என்பதற்காக நான் சிவசமவாதியல்லேன்; அநேகசுரவாதியுமல்லேன்' – என ஞானப்பிரகாசர் தாமே தெரிவிக்குங் கருத்தொன்றைச் சித்தியார் முதலாஞ் சூத்திரத்து 64 ஆஞ் செய்யுளுரையிற் காணலாம். அது, சத்தியமிஃதிருக்க முக்தான்மா சர்வஞ்ஞத்துவ (முற்றறிவு) சர்வகர்த்திருத்வ (முழுஆற்றல்) சிவத்துவ விளக்கத்தினாலே சிவனோடே முற்றுபமனாதலால் அவன்போல விஸ்வகர்த்தா ஆவன் என்று சிவசமவாதி, அநேகசுரவாதி முதலோர் செப்புவார்கள். அஃதறிவின்மை. சிவனது பஞ்சகிருத்தியத்தோடு தவிர்க்க முடியாத வகையில் உடனியலும் பஞ்சகிருத்தியகாரனே இம்முக்தான்மாவாதலால், அவன் விசுவகர்த்தாவன்று, சிவனே விசுவகர்த்தா. – எனவரும்.[21] இனி, முக்தான்மா சிவசமம் என்ற இக்கோட்பாட்டெழுச்சிக்கு மூலமானது, சைவ சித்தாந்தத்திற் சிவப்பேற்றுக்கு முன்னோடியெனக் சொள்ளப்படுஞ் சிவோகம்பாவனை என்பது. சிவோகம் பாவனையாவது சுத்தநிலைபெறும் ஆன்மா, தான் சிவனெனத் திருவருளாற் டாவிக்கும் பாவனை விசேடமாகும். விஷ வைத்தியத்திற் சம்பந்தப்படும் கருட பாவனை நகுல பாவனைகள் இதற்குதாரணமாகக் காட்டப்படும். இப்பாவனை சிவப்பேற்றுக்காம் ஒருசாதனமேயன்றி முடிந்த முடியாய் விடமாட்டாது எனல் சிவசமவாதிகளல்லாத சித்தாந்த ஆசிரியர் கருத்து. அதேவேளை, அருளாற் பாவிக்கப்படும் பாவனை எதுவும் பயன்படாமற் போவதில்லை என்பதும் அவர்க்குடன்பாடு. அது, சிவஞானசுவாமிகள் மாபாடியத்தில், 'பாவனைகளும் உபாசனைகளும் கற்பித்துக் கொண்டு செய்யுஞ் செயல் போலியென்றல் மாயாவாதி கூறுங் கூற்றாகலின் அது சைவசித்தாந்தத்துக் கேலர்மை அறிக'[22] எனக் கூறுதலாற் பெறப்படும். இருந்தும் அப்பாவனை சிவசமத்துவமுறுதற்குரியதாகாது எனல் அவர் மதமாம். ஞானப்பிரகாசரோவெனில், அதனைத் தமது சூக்கும விசாரத்துக்குள்ளுறுத்திக் கண்டு, சிவப்பொருள் மாத்திரங் குறித்த

சிவபாவனை, சிவசாதி குறித்த சிவபாவனை என அது இருதிறப்படுமென்றும் அவற்றுள் முதலாவது சிவனை அணுகவைக்கும்; இரண்டாவது சிவசமத்துவத்தை ஆக்கும் என்றும் வகுத்துக் காட்டி இரண்டாவது பாவனை முதலாவது பாவனையுள் முகிழ்த்தெழுந்து சிவசாமிய பலனை விளக்கும் என மேலதிக விளக்கமுந்தந்து உதாரணமும் காட்டுவர். ஸ்ரீமத் சுந்தரமூர்த்தி, ஸ்ரீமத் மாணிக்கவாசகர், ஸ்ரீமத் அருணகிரிநாதர் என்னுமிவர்கள் தேவாரத்தும் திருவாசகத்தும் அலங்காரத்தும் முறையே,

'வழித்தலைப்படுவான் முயல்கின்றேன்
உன்னைப் போலென்னைப் பாவிக்கமாட்டேன்' – என்றும்

'ஆனந்த வார்கழலே ஒப்பாக ஒப்புவித்த உள்ளத்தாருள்ளிருக்கும்
அப்பாலைக்கப்பாலைப் பாடுதுங்காண் அம்மானாய்' - என்றும்

'என்னை உன்னிலொன்றாய்விதித்தாண்
டருள்தருங் காலமுண்டோ' - என்றும்
இப்பாவனையைத் தானே படித்தார்கள் - என்பது.[23]

இனி, சிவப்பேற்றுக்கின்றியமையாத மலநீக்கத்துக்குதவும் எனப் பொதுவில் மற்றையோரால் தழுவப்படும் சிவோஹம் பாவனை நிலை, ஞானப்பிரகாசமுனிவர் காட்சியிற் சிவசமாதி கூட்டும் நிலையாகிறது. அதனை விளக்குதற்கு ஒன்பதாஞ் சூத்திரத்து ஐந்தாஞ் செய்யுளில் 'சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன் வேறின்றி' எனவருந் தொடர் அவர்க்குத் தளமாகின்றது. அத்தொடர்க்குப் பொருள் பண்ணுகையில், வேதாந்தத்திற் சோஹம் (அது நான்) என்றும் விசிட்டாத்வைதத்தில், தாஸோஹம் (அடிமை நான்) என்றும் வழங்கும் பாவனைகளுக்கும் சைவசித்தாந்தத்திற் சிவோஹம் என வழங்கும் பாவனைக்கும் வித்தியாசமுண்டு. அவை இலட்சியத்தைப் படர்க்கையிற் கொள்ளும் படர்க்கைப் பாவனைகள். அவற்றுக்கெதிர், இது இலட்சியத்தைத் தன்னிடத்ததாகக் கொள்ளும் தன்மைப் பாவனை. மேலும், வேதாந்த பாவனை பொதுவியல்பினது; சித்தாந்த பாவனை சிறப்பியல்பினது, விசிட்டாத்வைத பாவனையோ இரண்டும் கெட்ட நிலையிலுள்ளது. ஸோஹம் அஸ்மி என்றோதும் வேதாந்த ஸோஹத்தை, சிவோயம், சிவமிதம் எனமாற்றிப் பாவிக்கினும் அது ஆரோபிதமாமளவன்றி வேறில்லை. அதில் லட்சண லட்சிய ஒருப்பாடில்லை. சிவோஹமே லட்சிய லட்சண ஒருப்பாட்டுக்குரியது. அதனால் அது இதனிடத்தே ஏகபாவம் (சிவனோடொன்றாந் தன்மை) வருவிக்கும் ஆற்றலுண்டு.



ஏகீபவிக்க வேண்டுமிடத்தில், 'அடிமைநான்' (தாஸோஹம்) உணர்வு தலைப்படுதல் அதற்கிடையூறாகும், தம்முள் விரோதத் தன்மையுள்ள அவ்விரண்டும் ஒருங்கிணைதல். 'என்தாய் என்பதும் மலடி என்பதும் ஒருங்கிணைந்து 'என் தாய் மலடி' என நிற்றல் போல் விபரீதம் விளைப்பதுமாம். – என்ற பொருள்பட விரித்துரைப்பர்.[24] இவரது இந்நிலையை உற்றுநோக்கிய அறிஞர் நல். முருகேசு, It will be seen from this illustration that Gnanaprakasar is severely logical and monistic in his concept of mukti.[25] எனக் குறிப்பிட்டுள்ளார். ஆனால், ஞானப்பிரகாசர் தான் வேதாந்தி (Monist) அல்ல என மறைமுகமாகத் தெரிவித்துள்ள இடமொன்றும் அவருரையிலுண்டு. ஆறாஞ் சூத்திரத்து முதலாஞ் செய்யுளில். 'அறிபொருள் அசித்தசத்தாம்' என வருந்தொடரில், அசத்தென்றதற்கு அசுத்தம் எனப் பொருள் கொண்டு, மேல் அவர் தருங்குறிப்பு, 'அசத்தென்றதற்கு இவ்விடத்து அசுத்தம் எனப் பொருளுரையாது அசத்தியம் என்றுரைக்கில் வேதாந்தமாய் விடும்' எனல் காண்க.[26]

இங்ஙனம் தான் சிவசமவாதியுமல்ல, வேதாந்தியுமல்ல எனத் தானே நிராகரித்துக் கொண்டு ஞானப்பிரகாசர் தழுவும் சிவசமவாதம் ஒரு தனித்துவமானதும் புதுமையானதுமாம்.

சைவசித்தாந்த மரபு விரோதக் கொள்கையாளர்களுக்குச் சிம்மசொப்பனமாய்த் திகழும் மாதவச் சிவஞானமுனிவரும், ஞானப்பிரகாசரின் சிவசமவாதத்தின் தனித் தன்மையை ஏற்றுக் கொண்டுள்ளார். மாபாடியத்தில் அவர் தரும் மாபெரும் பிரகடனமான சிவசமவாத மறுப்புப்பகுதியில்[27] ஞானப்பிரகாசரை, மற்றொரு வகையாற் சிவசமவாதம் பேசுபவர் என்ற கருத்தில், மற்றொரு சாரார் என அவர் குறிப்பிடுவதனால் அது பெறப்படும். அவர் தமது கண்டனத்தில், இவரே கையாண்டுள்ள, 'சிவசாதி குறித்த சிவபாவனை' போன்ற பரிபாஷைகளைக் குறிப்பிட்டு விமர்சித்தல், இவரையே அவர் மற்றொரு சாரார் எனக் குறிப்பிட்டுள்ளார் என்பதற்கத்தாட்சியாம். அங்ஙனம் விமர்சிக்கையிலும், சிவாக்கிரயோகிகளின் பிரமமுதற்காரண (நிமித்தோ பாதான) வாதமறுப்பு விஷயத்திற்போல அவர் பிடி மெத்தெனவாயிருத்தலுடன் ஆரம்பத்தில், அவர் விமர்சிக்கப்படுந் தரத்தராகார் என ஒருவகையாற் புலப்படுமாறு, 'எத்தன்மையராயினுஞ் சிவதீக்கை உடையவராய்ச் சிவாகமத்தில் விதித்தவாறொழுகி அகச்சமயத்தினிற்றலின் அவரறிவைப் பழிக்கலாகாமையின் அவரறிவு அவ்வளவிற்றென்று போதலே

பொருத்தமுடையதென்றொழிக ', என அவதாரிகையில் அமைதி கூறி, மேல், ' அற்றேல் வழியளவைக்கும் ஆகமவளவைக்கும் இயைவனபோல வற்புறுத்தி அவருரைத்தவையெல்லாம் ஆரவாரமாத்திரையாய்ப் போமாறு யாங்ஙனம். அதை அறியும் குதூகலம் உடையேன் என்பையாயிற் சிறிது காட்டுதும் ' என ஒரு தக்குவைத்து மேற்செல்லுதல் காணத்தகும்.28 சிவஞான சுவாமிகள் இங்ஙனம் தாம் மேற்கொள்ளும் மறுப்பில் சும்மா ஒரு சாதாரண சிவசமவாதியை நோக்கியுரைக்கும் பாணியில்,

மகன் மன்னவனேவலின் வழிநின்று பணிந்தொழுகுவானெனில், தாட்டாந்திகப் பொருளிலும் (முக்தான்மாவும் சிவனும்) அவ்வாறே கொள்ளப்படும். அது எம்மனோர் சித்தாந்தமாகலின் உனக்கு அவசித்தாந்தமாம் ( 28 a ) என்கிறார். ( இங்கு உனக்கு என்பது ஞானப்பிரகாசருக்கே என்றுபடும் ) ஆனால் ஞானப்பிரகாசர் முக்தான்மா சுதந்தரனாய் இருந்து பஞ்ச கிருத்தியஞ் செய்வானெனக் கூறியதாகவோ கருதியதாகவோ அவருரையில் இல்லை. அவர் கருத்தும் இதற்கெதிராகவே இருந்தது என்பதற்கு இருவித அத்தாட்சிகள் உண்டு. ஒன்று, முதலாஞ் சூத்திரம் 64 ஆஞ் செய்யுள் உரையில் பாசுபதர் முதலிய முத்திநிலைச் சுதந்திரங் கூறுவாரைக் குறித்து அவர், முற்றுபமனாதலால் சிவன் போல விச்வகர்த்தா வாகட்டுமென்று சிவசமவாதி அநேகேசுரவாதி முதலியோர் செப்புவார்கள். அஃது அறிவின்மை எனத் தம்நிலை விளங்கக் கூறியிருத்தல்.29 மற்றையது, ஆறாஞ் சூத்திரத்து முதற்செய்யுளுரையில், முக்தான்மாக்களுக்குச் சித்திக்கும் பஞ்சகிருத்தியம் அவர்ச்சனீய சம்சித்த பஞ்சகிருத்தியம் - தவிர்க்கப்படாத நிலையில் ஏற்படும் பஞ்சகிருத்தியம் என்றதன் தாற்பரியமாம். எவன் எனினும் பிறர்பிடியிலிருந்து தன்னைத் தவிர்க்க முடியாமையால் அவரிட்ட தொழிலைச் செய்பவனைச் சுதந்திரன் என்பது சரியாமெனின் மட்டுமே இங்கு சுவாமிகள் கூற்றுச் சரியாகும். இனி, சுவாமிகள் தமதுரையில் 356ஆம் பக்கத்தில் வரும், ' மன்னவனோடொப்பச் சுதந்திரனாய்த் தன்னாணையும் உடன் செலுத்திச் சுதந்திரனாய் அரசாட்சி செய்வனென்னில் அஃது அநேகேசுரவாதி மதமாய் முடியும் ' எனக் கூறுவதும் உண்மையில் ஞானப்பிரகாசரை மறுப்பதாகாது. ஏனெனில், அவர் இதற்காளாகாமைக்கு மேற்காட்டிய, ' முற்றுபமனாதலால் . . . . . அஃதறியாமை ' என்ற அவர்வாக்கும் குறித்த ஆறாஞ் சூத்திர முதற் செய்யுள் உரையில் வரும், 'பின்னசங்கற்பப் பிரவிருத்தியின்மையால் ' என்ற அவர் வாக்கும் போதிய அத்தாட்சியாகும். அவர்ச்சனீயமானதும் பின்னசங்கற்பப் பிரவிருத்தியற்றதுமான ஒரு நிலையில் சுதந்தரத்துக்கிடமெங்கே? தன்னாணை செலுத்தற்கிடமெங்கே?



மேலும் சிவசாதி பற்றிய சிவோகம்பாவனை மூலம் சிவனுக்குரிய பஞ்சகிருத்திய ஆற்றல் முக்தான்மாவுக்குமிருக்கும் என்ற ஞானப்பிரகாசர் கொள்கையை மறுப்பதற்குச் சுவாமிகள் காட்டும், 'ஒருசாதி மாத்திரையால் உனக்குப் போந்ததென்னை? மன்னவனும் அவன் மனைவியும் மன்னர்சாதியேயாயினும் மன்னன் செய்யும் அரசாட்சி அவன் மனைவியுஞ் செய்வாளென்றற்குரிமையின் ' ( 29 a ) என்பதும் பிரச்சினைக்குரியதாகவே தெரிகிறது.

ஞானப்பிரகாசர், ஆத்மா சிவன் செய்யும் பஞ்சகிருத்தியத்தைத் தானுஞ் செய்யத் தானாக முனையும் எனக் கூறியதேயில்லை. அரசனுக்கு அடக்கமும் விசுவாசமுமான பத்தினியாய் இருக்குமளவில் அரசிக்கும் தார்மீகரீதியான ஆட்சியுரிமைக்காம் மஹத்துவம் உண்டு என்பதை மறுப்பதெப்படி? சாமானிய தாம்பத்திய உறவுரிமை ஒன்றானே அது நிருபிதமாகுமே. ஞானப்பிரகாசர் கொள்கையின் யதார்த்தமும் அதுவேயன்றி வேறில்லை. சிவனோடு ஆத்மா ஏகீபவித்து (சிவோகம் பாவனை மூலம்) நிற்குமளவில் சிவனுக்காம் பஞ்சகிருத்திய ஆற்றலில் ஆன்மாவிற்குரிமையிருக்கும் என்பதையே ஞானப்பிரகாசர் பலவாற்றாலும் தெரிவித்திருக்கிறார். இந்நோக்கில் அரசன் மனைவி எடுத்துக்காட்டு ஞானப்பிரகாசர் கொள்கைக்குப் பகைப்புலமாதலுக்கெதிர் நட்புப்புலமாதலே பொருத்தமாகிறதெனலுமாம்.

இவைபோல விசாரித்தற்குரிய அம்சங்கள் சுவாமிகள் மறுப்பில் இன்னும் உள. அவற்றுள் ஒன்றிரண்டையாவது கவனித்தல் தகும். முக்தான்மா சிவசமமாம் என்பது செய்நன்றி கொன்ற பாவமாம் ( க்ருதக்னதா ) ஒருகால் தந்தையை (இன்னொருகால்) அபகரித்த அயோக்கியத்தனமாம் ( தத்தாபகாரம் ) என, சிவாக்கிர யோகிகள் கூறுவதற்குச் சமானமாக, சுவாமிகளும் 358ஆம் பக்கம் இரண்டாம் பந்தி முதலியவற்றிற் கூறுவனவெல்லாம் ஆத்மாவானது அருளையறியாவண்ணம் தன்முகாந்தரத்தில் சிவசமத்துவம் மேற்கொண்டிருப்பதென்றால் மட்டுமே பொருந்துவதாம். சார்ந்ததன் வண்ணமாதல் ஆன்மவியல்பென்பதை ஒத்துக்கொள்ளும் சுவாமிகள், முத்தியில் ஆன்மா சிவசமத்துவமாம் என்று வெளிப்படையாகக் கூறும் சர்வஞ்ஞானோத்தராகமத்தினின்று ஆன்மா சார்ந்ததன் வண்ணமாதலுக்கு ஆதாரம் காட்டுஞ் சுவாமிகள், முக்தான்மா சிவனைச் சார்ந்தமையால்

நேர்ந்ததே அதற்குப் பஞ்சகிருத்திய ஆற்றல் என்கிற ஞானப்
பிரகாசரின் கருத்தையும் ஒத்துக்கொள்ள வேண்டிய நிலையி
லுள்ளார் எனவேபடும். அன்றெனில், அவர் சர்வஞானோத்தரத்
தையும் ஏற்கவில்லையென்றாய் விடும். ஒருவேளை இதிலிருந்து
தம்மை விலக்கிக்கொள்ளும் பொருட்டோதான் சுவாமிகள்,
'முக்தான்மா முத்தியில் சிவசமமாகிச் சுதந்தரமுடையனாவான்
என அவ்வாகமம் கூறுவது அவ்வாகமத்திற் 'பதி' எனப்பட்ட
தடஸ்த சிவநிலையை நோக்கியன்றிச் சொரூப சிவநிலையைக்
குறித்தன்றாம் (29 b) என அமைதி கூறினார் எனற்கும் இட
முண்டு. அதுதானும் ஞானப்பிரகாசர் கருதும் கொள்கையை
மறுத்தமைக்காகாது. ஏனெனில் பதி நிலையே பஞ்சகிருத்திய
நிலையாதலின்.

இது சைவ சித்தாந்த விஷயங்களில் அதிஉயர்மட்ட விஷயம்.
இத்தகுவிசாரணை அளவில் இது முடிவுற்றுவிட்டதாகாது.
ஆயின், சிவஞானசுவாமிகள் விளக்கத்தில் தலையிட்டு இவ்
வளவும் விசாரித்தது அவர் அறிவினும் கூடிய அறிவும் உண்
டென இங்கு காட்டும் குறிப்போ எனில் அன்று. அது கனவினுங்
கருதற்பாலதன்று. பின்னையென்னெனில், ஞானப்பிரகாசர்
காட்டும் சிவசமவாதக் கருத்துக்கு உயர்தர அறிவினாலுஞ்
சாதாரணமாக நிராகரிக்கப்படாத அளவுக்கு ஒரு யதார்த்தம்
உண்டு எனத் தோற்றுமளவேயாம்.

இன்னும் இதன் சார்பில் சிந்திப்போமானால் சீவன் முத்தர்
களாய் விளங்கிய நமது பரமாசாரிய மூர்த்திகளாற் படைப்பு
அழிப்பு ஆகிய பஞ்சகிருத்திய அம்சங்கள் சிவனருள் உந்துதலி
னால் நிகழ்ந்திருப்பதற்குச் சரித்திர ஆதாரம் உண்டு. தேவாரச்
சான்றும் உண்டு. திருஞானசம்பந்தராலும், திருநாவுக்கரசராலும்
இறந்தவர்கள் இறந்த கையோடே உயிர்ப்பிக்கப்பட்டிருக்கிறார்
கள். சுந்தரரால் சில வருடங்களுக்கு முன் முதலைவாய்ப்பட்ட
சிறுவன் அதே முதலை வாயிலிருந்து மீட்கப்பட்டிருக்கிறான்.

பலநாட்களுக்கு முன் இறந்துபோன பூம்பாவை சம்பந்தரால்
தத்ரூபமாக அவளுடைய உடற்சாம்பரிலிருந்து மீட்கப்பட்டிருக்
கிறாள். போதிமங்கையில் சம்பந்த சுவாமிகள் சந்நிதியில் அவர்
தேவார வாய்மை விசேடத்தால் புத்தநந்தி தலையிழந்து அழிந்
திருக்கிறான். இவையெல்லாம் முக்தான்மாக்களுக்குப் பஞ்ச
கிருத்திய உரிமையுண்டு. ஆனால் அது ஏகபோகமாகவல்ல
சிவனருள் தூண்டும் போது மட்டும் தொழிற்படுகிறது என்ற



நிலையைத் தெரிவிக்கின்றன. இப்படி அவர்களுக்குப் பஞ்ச
கிருத்திய உரிமையுண்டென்பதாயின்,

'உம்பர் பிரானுற்பத்தி யாதிகளுக்குரியன்
உயிர்தானுஞ் சிவாநுபவம் ஒன்றினுக்குமுரித்தே'[30]

என்ற கருத்துக்கு மாறுபாடாகுமே எனின், ஆகாது. அவர்கள்
சிவனருளாலன்றி ஒன்றையுஞ் செய்யாத – ஞானப்பிரகாசர்
வாக்கில் பின்னசங்கற்பமற்ற – நிலையிலுள்ளவர். அதனால்
அவர்கள் எது செய்கினும் அது சிவனருளை ஆராதிப்பதேயன்றி
வேறாயிருக்க முடியாது. சிவனருளை ஆராதிப்பதைவிடச் சிவா
நுபவமென்று வேறென்ன இருக்க முடியும்? எனவே அவர்கள்
பஞ்சகிருத்தியத்தில் தொடர்புறுகையிலும் சிவாநுபவம் பெறு
பவரேயாவார். இதற்கு ஒரு சிறுஉதாரணம் கண்டு அமை
வோம்.

பூம்பாவை உருத்தெழுந்து விட்டாள். எல்லோரும் அவள்
அழகைப் பார்க்கின்றனர். அவளை ஆக்கிய சம்பந்தரும் பார்க்
கின்றார். என்ன பார்க்கின்றார்? 'கண்ணுதல் கருணைவெள்ளம்
ஆயிரம் முகத்தாற் கண்டார்' (புகலி வேந்தர்) என்கிறார்
சேக்கிழார்.[31] பூம்பாவையைப் பார்க்கையில் சம்பந்தருக்கு நேர்ந்த
தென்ன? கருணைவெள்ளக் காட்சி. இது சிவபோகமோ? அன்றோ?

## ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்

திருநெல்வேலி ஞானப்பிரகாசர் மரபின் கான்முளையாய்த்
தோன்றிக் கடந்த நூற்றாண்டில் இந்நிலத்துச் சைவாகமப்
பொக்கிஷமாய்,[32] சைவசித்தாந்தத் தெய்வீகவைப்பாய்[33] மெய்
யறிஞர் கண்டு போற்ற விளக்கியவர் நாவலர்பெருமான். தமது
வாழ்வு முழுவதிலும் அர்ப்பணபுத்தியோடு கூடிய நைஷ்டிகப்
பிரமசாரியாய் இருந்து அவர் இயற்றிய சமயப்பணி, கல்விப்
பணி, சமூகப்பணி, நூற்பிரசுரப்பணி ஆகிய அனைத்தினதும்
உத்வேகம் சைவசித்தாந்த உத்வேகமே – அவர் வாக்கிற் கண்ட
படி, பெறுதற்கரிய இம்மானுட சரீரத்தை நாம் பெற்றது
கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறற் பொருட்டேயாம்[34]
என்பதன் சார்பிலான உத்வேகமேயாதல் ஒருதலை. அவர்
ஆற்றிய பிரசங்கங்கள் அனைத்தும் விசேட சைவசித்தாந்த
விளக்கங்கள். திருவாவடுதுறையாதீனத்தில் உடனேற்பாட்டின்
பேரில் அவர் இயற்றிய பதி பசு பாசம் பற்றிய பிரசங்கமே

கைம்மேற்பலனாக 'நாவலர்' என்ற உயர்விருதை வழங்குவித்தது.[35] நல்லூர்க் கந்தசுவாமிகோயிற் கந்தபுராணபடனத்தின்போது, 'வேதக் காட்சிக்கும் உபநிடக் காட்சிக்கும் - - - -, என்ற செய்யுளுக்கு அவருரைத்த விளக்கவுரை சைவசித்தாந்த சாராமிர்தமாகப் போற்றப்பெற்றமை பிரசித்தம். திருத்தொண்டர் புராணத்துக்கு அவர் எழுதிய சூசனங்களும் அத்தகையன. சைவசித்தாந்த சாஸ்திரம் ஒன்றை ஆக்கவோ இருந்தவற்றில் ஒன்றுக்கு உரையெழுதவோ அவருக்கு அவகாசமிருந்ததில்லை எனத் தெரிகிறது. எனினும், சிவஞானபோதச் சிற்றுரை, சிவஞானபோத மாபாடியம் இரண்டுடன் அவிரோதவுந்தியார் கொலை மறுத்தல் முதலிய சைவசித்தாந்த நூல்கள் அவராற் பதிப்பிக்கப்பெற்றுள்ளன. சைவநீதி ஒழுக்க நூல்களாகிய வாக்குண்டாம். நல்வழி, நன்னெறி, மூதுரை ஆதியன அவரால் உரைவிளக்கம் பெற்றுள்ளன. அவரது முதலாஞ் சைவவினா விடை சைவசித்தாந்த அரிச்சுவடியும் இரண்டாம் சைவ வினா விடையின் முதல் ஐந்தியல்களும் சிவஞானசித்தியார்ப் பொருளறிமுகமுமாம் பெற்றியன.[36] சுருங்கவுரைக்கில் அவர் பேச்சுப் பணி எழுத்துப்பணியெல்லாம் ஒருசேர நோக்கின் சைவ சித்தாந்த முழுமை விளக்கமாதல் தப்பாது எனலாம். எல்லாவற்றுக்கும் மேலானவை யென்னும்படி விளங்கிய அவர் வாய்மை சைவசித்தாந்த வாய்மை, அவர் தூய்மை சைவசித்தாந்தத் தூய்மை, அவர்பால் விளங்கிய வீறு சைவசித்தாந்த ஞானவீறு, அவர் நடை சைவசித்தாந்தநடை. இவைகூட யாழ். சைவ சித்தாந்த உணர்வு விளக்கத்தில் அவர் பதித்துவைத்த சுவடுகள் ஆகும்.

ஞானப்பிரகாசர் வழிவந்த சைவ அறிவியல் மாண்பை உறுதிப்படுத்தி, காலவசத்தால் நேர்ந்த கலாசாரக் குளறுபடிகள் அதனைத் தீண்டாமற் பாதுகாத்து, யாழ். சைவசித்தாந்த அறிவியல் மேதை மெருகுமங்காமற் பிற்சந்ததிக்குதவ வைத்தவர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள்.

## காசிவாசி செந்திநாதையர்

நாவலர் பெருமானின் அபிமான மாணவராய் விளங்கிய செந்திநாதையர் ஞானப்பிரகாச முனிவருக்கீடான சமஸ்கிருத ஞானமும் நாவலர் பெருமானுக்கொத்த தமிழறிவு விலாசமும் போதுமான அளவு ஆங்கில அறிவும் வாய்ந்து, யாரும் ஒப்பாகா அளவுக்கு நாவலர் வகுத்த பணிகளில் அத்தியந்த ஈடுபாடுற்று விளங்கியவர். தமது மும்மொழிப் பாண்டித்தியத்தினாலும்



சமய ரீதியில் காலத்தேவையையொட்டி நூல் வெளியீடுகளும் பிரசுரங்களும் தருக்க வாதங்களும் கண்டனப் பிரசுரங்களும் பெருமளவிற் செய்ததன் மூலம் இவர் ஈழத்திலும் இந்தியாவிலும் சைவசித்தாந்த விளக்கம் உயர்வுற ஓல்லும் வகையாவெல்லாம் அயராதுழைத்தவர். சம்ஸ்கிருத தத்துவ நூல்கள் பிரதிபலிக்கும் சைவசித்தாந்த விளக்கத்தை மழுங்க வைப்பதற்காக அந்நாளில் ஏகான்மவாத மாயாவாத குரவர்கள் உபநிடத பிரமசூத்திர இதிகாச புராணங்களிற் செய்துவிட்ட உருமாற்றங்கள், பெயர்த்தெடுப்புக்கள், இடைச்செருகல்களை இனங்கண்டறிந்து உண்மை நிலையை ஊர்ஜிதம் செய்யும் நோக்கில் அதற்குகந்த சூழல் தேடிப்போய் காசியிற் பத்து வருடங்கள் ஒரே தொடர்பாக வாழ்ந்து காசிவாசி எனப் பெயர் விசேடணம் பெற்றவர். ஆங்கில வல்லுனரான திரு. நல்லசாமிப்பிள்ளைக்குச் சைவ சித்தாந்த நுண்பொருளுண்மைகளைப் போதித்து அவர் மூலம் சைவசித்தாந்த விளக்கம் ஆங்கிலத்திலும் வெளிவர உதவியவர். ஆண்டாள் அம்மையார் என்ற ஒரு உத்தமிக்குச் சைவ சித்தாந்த விளக்கம் புகட்டி அவர்மூலம் வைதிகசுத்தாத்துவித பரமான சைவசித்தாந்தப் பிரசங்கங்கள் செய்வித்தவர்.[37]

ஐயரின் நூலாக்கங்கள் தனித்துவமானவை. அவர் ஆக்கங்களுள், சிவஞானபோத வசனாலங்கார தீபம் என்ற நூல் சிவஞானபோதத்தின் வெளிப்படைப்பொருள், குறிப்புப்பொருள் அனைத்தும் கற்போருளத்தில் அச்சமுத்தமாகப் பதிய வைக்கும் விசேடஉத்தியோடு கூடியது. அதிலுள்ள ஒவ்வோர் பதமும் அதுவதன் செம்பொருளும் தொடர்ந்தேர்ச்சியாக நினைவிற் பதியவைக்கும் வினாத்தொகுதிகளோடு கூடியது. மற்றொரு பெயர் கொடுப்பின் சிவஞானபோதப் பொருள் நுணுக்கப் பிரகாசிகை[38] எனத்தக்கது. 'தமக்குச் சிவஞானபோதப்பொருளில் தெளிவு பிறக்க உதவியது செந்திநாதையரின் வசனாலங்கார தீபந்தான்' எனத் திரு. க. வச்சிரமுதலியார் பாராட்டக் கேட்டதுண்டு. பிரமசூத்திர நீலகண்ட பாஷ்யம், தேவாரம் வேத சாரம், சைவவேதாந்தம் என்ற மூன்றும் ஐயரின் ஏனைய நூல்களிற் பிரசித்தமானவை. அவற்றின் பின்னணி, விபரமாக ஆய்ந்துணரத்தக்கதாகும்.

சைவசித்தாந்தங் கொண்டு காட்டும் முப்பொருளிலக்கணம் முத்தியிலக்கணம் முதலானவை வேதநூற் பொருளுக்கு மாறுபட்டவை என்ற ஒரு விளக்கம் ஏகான்மாவாத, மாயாவாத. விசிட்டத்துவைதவாத குரவர்களால் விதந்தெடுத்துப் பிரசங்கிக்கப்பட்ட ஒரு காலம் செந்திநாதையர் காலம். இம்முத்திறத்

தார்க்கும் ஆதார நூலாயிருந்தது சம்ஸ்கிருதத்திலுள்ள தத்துவ நூலாகிய பிரமசூத்திரம். பிரமசூத்திரமென்பது பரந்துபட்ட உபநிடதங்கள் தோறும் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்பட்ட ஆன்ம தத்துவ ஞான உண்மைகளைப் பொருளியல்புக்கேற்ப, நிரல்படுத்தி உண்மை முடிவு காட்ட எழுந்த ஒரு தத்துவ சாஸ்திர நூல். மதக்கோட்பாடு என்ற பெயரில் உலாவும் எதனையும் வரித்துக் கொண்டு அது எழுந்ததாகவில்லை. தன்னியல்பாயுள்ள அதனை வெவ்வேறு மதக்கோட்பாட்டாளர்கள் தம் கோட்பாட்டு இயல்பிற்கேற்ற வகையில் வசப்படுத்தி விளக்க முயன்றுள்ளனர். சங்கராசாரியார் இராமானுஜாசாரியார், மத்துவர் என்போர் தனித்தனி அதற்கெழுதிய உரை விளக்கங்கள் மேற்குறித்த கற்பிதக் கருத்துக்குத் தூபம் போடுவனவாய் அமைந்து விட்டன. தத்தம் பிரமசூத்திர விளக்கத்துக்கு ஆதாரங்காட்ட வேண்டி இவ்விவர்கள் முக்கியமான உபநிடத மந்திரங்களுக்கு முன்னோடியாக இயற்றிவிட்ட தவறான விளக்கங்களும் பல. அவற்றுக்கு உப விளக்கங்களாக இருந்த புராணேதிகாசங்களிற் செய்து வைத்த திரிபுகளும் பல. பிரமசூத்திர வசனங்களிலேயே புகுத்திவிட்ட மாற்றங்களுள் சில, அதே வேளை இந்தக் குரவர்களுக்கு முன்னமேயிருந்த நீலகண்ட சிவாசாரியார் என்பவர் சிவபரத்துவ விளக்க சகிதமாகப் பிரமசூத்திரத்திற்கு எழுதிய உரையுமொன்றிருந்துள்ளது. ஆனால், இவையனைத்தும் சம்ஸ்கிருத மொழியிலேயே இருந்தமையால் அம் மொழிப்பயிற்சியற்ற தமிழ் மக்களிடையில் முன்னைய குரவர்களுடைய கருத்துக்கள் பிரசங்கிக்கப்பட்ட போது அவர்களுடைய சைவ சித்தாந்த உண்மையுணர்விற் பேதலிப்பு நேரும் விபரீதமும் உளதாயிற்று.

ஐயர் இந்தியாவுக்குச் சென்ற 1877 ஆம் ஆண்டுக் காலப் பகுதியில்[39] சென்னை முதலிய நகரப் பகுதியில் மாயாவாத விசிட்டாத்வைத மதப்பிரசாரங்கள் பெருமளவில் தலைதூக்கி இருந்தன. அவற்றுக்கெதிர் கண்டனப் பிரசங்கங்கள், நூல் வெளியீடுகள் செய்து கொண்டிருந்த அன்றைய சைவசித்தாந்த வல்லாளர் சோமசுந்தரநாயக்கர் தொடர்பினால் அந் நிலைக்கு ஸ்திரமான மாற்றுவழி காணும் வேட்கை தலைக்கொள்ளப் பெற்றார் ஐயர். அதன் சார்பில், அன்றைய மாயாவாத விசிட்டாத்வைதப் பிரசங்கிகள் மேற்கோள்காட்டும் சம்ஸ்கிருத நூல்களான பிரமசூத்திரம், உபநிடதம், புரோணேதிகாசம் ஆகியவற்றில் புகுத்தப்பட்ட தவறுகளை வெளிப்படுத்தவும் பிரமசூத்திர நீலகண்ட பாஷியத்தைத் தமிழில் மொழிபெயர்த்து



வெளியிடவும் வேண்டிய தேவையுளதாயிற்று. அச்சூழ்நிலையில் பிரமசூத்திர உரைகளும் உபநிடத உரைகளும் இதிகாச புராணங்களும் ஐயரால் நுணுக்கமாக ஆராயப்பட்டன. அதன் மூலம் உபநிடதங்களின் உண்மைப்பாடங்களும் திரிபுப்பாடங்களும் அவை நுழைந்த வாயில்களுங் கண்டறியப்படுவனவாயின. பிரமசூத்திரத்தில் நீலகண்ட சிவாசாரியர் தழுவிய பாடங்களும் உபநிடத இதிகாச புராண மூலபாடங்களும் சைவ சித்தாந்த உண்மைவிளக்கத்துக்குச் சாதகமாய் இருந்தமையும் தெளிவாயிற்று. அந்நிலையில் ஐயர் நீலகண்ட பாஷியத்தைத் தமிழில் மொழிபெயர்ப்பாராயினர். உபநிடத ஆய்வில் தாம் கண்டுகொண்ட ஆய்வு உண்மைகள் உபநிடத உபக்கிரகமணிகை என்ற பெயரிலும் பிரமசூத்திர ஆய்வில் அங்ஙனங் கண்டு கொள்ளப் பெற்றவை பிரமசூத்திர உபக்கிரகமணிகை என்ற பெயரிலும் உருவாகி மொழிபெயர்ப்பு நூலுக்கு முன்னிணைப்புக்களாயின.

இவ்வுபக்கிரக மணிகைகளிரண்டும் சைவசித்தாந்தக் கருத்துக்களுக்கு வேதசாஸ்திரங்கள் விரோதமல்ல என்ற நிலையை மிக நுணுக்கமாகக் கண்டறியப்பட்ட ஆதாரங்களுடன் எடுத்துணர்த்தும் விசேடமுள்ளவை. ஐயர் அவர்களின் சைவசித்தாந்த உண்மை உணர்வுறுதியின் உச்சரக வெளிப்பாடாகத் திகழ்பவை. இவற்றுள் முன்னையது, உபநிடதக் கருத்துக்கள் சைவசித்தாந்தப் பொருளுண்மைக்கு ஆதரவாயிருப்பதையும் பின்னையது, நீலகண்ட சிவாசாரியார் உரைவிளக்கில், பிரமசூத்திரம் ( உயிரும் உலகுஞ் சிவசக்தி பரிணாமம் என்ற ஓரம்சந் தவிர மற்றும் படிக்கெல்லாம் ) சைவசித்தாந்தத்துக்கு அனுசரணையாய் இருக்கும் அதேவேளை ஏகான்மவாத மாயாவாத விசிட்டாத்வைத பக்தர்களால் அவற்றிலும் அவை சார்ந்த மற்றும் நூல்களிலும் செய்யப்பட்டுள்ள புரளிகளையும் அம்பலப்படுத்துவன. இவற்றின் அருமை பெருமை பற்றிப் பிரசித்தமான அறிஞர் மதிப்பீடொன்று பின்வருமாறு குறிப்பிடுதல் காணலாம்.

இப்பாஷியத்துக்கு உபநிடத உபக்கிரக்மணிகை, பிரம்மசூத்திர உபக்கிரகமணிகையென இரு பெரிய ஆராய்ச்சி முகவுரைகள் ஐயர் அவர்களால் எழுதப்பட்டுள்ளன. இரு முகவுரைகளும் 455 பிரிவுகள் கொண்டவை. முதல் 372 பிரிவும் உபநிடத உபக்கிரகமணிகை. ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொரு ''டாக்டர்'' பட்டம் வழங்கலாம். இரு உபக்கிரகமணிகைகளும் விளக்கக் குறிப்புடன் தனித்து அச்சிட வேண்டியவை.[40]

இப்பாரிய முயற்சியின் பொருட்டு வேதசங்கிதைகள், நூற்றுக்கணக்கான உபநிடதங்கள், (சர்வசாரம், இராமதாபனீயம் முதலிய கற்பித உபநிடதங்கள் உட்பட) 28 ஆகமங்கள் சம்பந்தப்பட்ட உபாகமங்கள், பதினெண்புராணங்கள் மற்றுஞ் சங்கிதைகள் இதிகாசங்கள் ஏன்? பாணினி வியாகரணம் 4 – 3 – 21 கூட (40a) ஐயரால் ஆராயப்பட்டுள்ளமைக்கு இவற்றிலேயே ஆதாரம் நிரம்பவுண்டு. இவ்வளவு அதிகிருச்சிர முயற்சி (Herculian task) எதன் பொருட்டெனில், நீலகண்ட சிவாசாரியார் பிரமசூத்திர உரையிற் காட்டிய சைவசித்தாந்த பரமான கருத்துக்களை மறுப்பதற்கு ஆதாரம் தயாரிக்க வேண்டி மாயாவாத குரவர் முதலியோர் கைவண்ணங்கள் அவ்வவற்றிற் புகுந்த புரைகள் அனைத்தையுந் துருவித்துழாவிக் கண்டு காட்டுதற் பொருட்டாம்.[41]

அங்ஙனம் ஐயராற் கண்டுகாட்டப்பட்டவற்றில் உதாரணத்துக்காக ஒருசிலவற்றை நோக்கல் தகும்.

பிரமத்துக்கு வேறாக ஆன்மா என ஒன்றில்லை என்பது பிரசித்தமான ஏகான்மவாத மாயாவாதங்களின் கோட்பாடு. ஆனால், அக்கோட்பாட்டுக்குத் தளமாக அவர்கள் கொள்ளும் பிரமசூத்திரத்திலோ அதற்கு விளைநிலமாய் இருந்த உபநிடதங்களிலோ இது அப்படித்தான் என்றில்லை. அது வருமாறு:

அதிகந்து பேத நிர்த்தேஷாத் – இது பிரமசூத்திரத்தில் இரண்டாம் அத்தியாயத்து முதலாம் பாதத்தில் இரண்டாஞ் சூத்திரம். ஆயின் காரணம் சிரேஷ்டம், பேதங் கூறப்படலான் என்பது சிவாசாரியர் இதற்குரைக்கும் பொருள். இதில் வரும் பேதங்கூறப்படல் என்பதற்கு உபநிடதங்களிற் பிரம – ஆன்ம வேறுபாடு கூறப்படுதல் என்பதர்த்தம். அதற்கு உதாரணம் வருமாறு:

1) வித்யா வித்யே ஈசதே யஸ்து ஸோன்ய:- சுவே. 5 – 1 வித்தையையும் அவித்தையையும் ஆளும் ஈசன் அவற்றின் வேறு. (வித்யா – ஞானம் – சித் – சேதனம். ஆதலின் ஆன்மா. அவித்யா – அஞ்ஞானம் – அசித் – அசேதனம். ஆதலின் பிரபஞ்சம்)

2) க்ஷராத்மானா வீசதே தேவ ஏக:- சுவே. 1 – 10. மூலப் பிரகிருதியையும் ஆன்மாவையும் ஏகனாகிய தேவன் ஆளுகிறார். (க்ஷரம்-அழியும் பான்மையது ஆதலின் மூலப்பிரகிருதி)



3) நித்யோநித்தியானாம் சேதனச் சேதனானாம்:- கட. 5.13. சிவன் நித்தியப் பொருள்களில் நித்தியரும் சேதனப் பொருள்களுட் சேதனரும் ஆவார். (2 ஆவது நித்தியம், சேதனம் இரண்டும் குறிப்பது ஆன்மாவை)

4) அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜனானாம் – தைத். ஆரண், 3 – 11 – 21. சிவன் ஆன்மாக்களுள்ளே பிரவேசித்து அவைகளை ஆளுவாராயினர். ஜன – ஆத்மா.

5) யேஷாம் ஈசே பசுபதி: ஜனானாம் – தைத். சங். 3-11-21. பசுக்களாகிய அவைகளை ஆளுகிறார் பசுபதியான சிவன்.

6) த்வா சுபர்ணா சயுஜா சகாயா:- சுவே. 4. 6. – பிரியா நண்பினோடு அழகிய இருபட்சிகள் இத்தியாதி உபநிடத வாக்கியங்களெல்லாம் பிரமத்துக்கு வேறாக ஆன்மா உண்டென்று கூறி முற்காட்டிய பிரமசூத்திரப் பொருளை உறுதி செய்வனவாயிருக்கவும் கடாகாய மஹாகாய விளக்கங்காட்டிச் சூத்திரக் கருத்துக்கு மாறாக ஏகான்மவாத குரவரால் விளக்கச் செய்யப்பட்டுள்ளது. அது வருமாறு:

அ) இதற்குரிய இடங்கள் இரண்டு. அவற்றுள் ஒன்று சூதசங்கிதையில் யத்ஞ வைபவ கண்டத்துப் பிரமகீதை 7 ஆம் அத்தியாயம். அங்கு இதற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் புது விளக்கமாவது:

இரண்டு அழகிய பட்சிகள் இந்தச் சரீரத்தில் சிவன் என்றும் ஈசன் என்றும் நிற்குங்கால் அவற்றுட் சீவன் கர்ம பலத்தைப் புசிக்கின்றது. மகேஸ்வரர் புசிப்பதில்லை. எப்படி ஆகாசம் கடாகாசம் எனவும் மஹாகாசம் எனவும் பேதமுடைத்தாயிருக்கின்றதோ அங்ஙனம் பர அறிவானது சீவரூபமாயும் சிவரூபமாயும் கற்பிக்கப்பட்டிருக்கின்றது.

உருத்திர ஹ்ருதயோபநிடதம், அன்னபூர்ணியுபநிடதம் என்பவை இரண்டாவதிடம். அங்கும் இவ்வாறே கூறப்பட்டுள்ளது.

ஆ) அப்பைய தீக்ஷிதர் எனும் பிரசித்த சம்ஸ்கிருத மொழி மூலசைவசித்தாந்த ஆசிரியர், நீலகண்ட சிவாசாரியர் பிரமசூத்திரத்துக்கியற்றிய சிவாத்வைத பாஷியம் சங்கர பாஷியத்தைவிட மேலானது என்று போற்றிச் சிவாத்வைத

நிர்ணயம் என்ற பெயரில் நூல் செய்துள்ளார். மாயாவாதிகளால் அதிலும் இரு மாற்றங்கள் செய்யப்பட்டிருக்கின்றன.

1. நீலகண்ட சிவாசாரியர் கொள்கைக்கு மாறுபாடான நிர்க்குணப் பிரமம் ஒன்றின் இருப்பை நியாயப்படுத்தும் பொருட்டு, 'நிரன்வயோ பாசகானாம் இஹைவமுத்தி' நிர்க்குணோபாசகர்களுக்கு இங்கேயே முத்தி, என நூல் முகப்பில் புதிதாக எழுதப்பட்டமை.

2. "சக்தி சிவச்ச சத்சப்த ப்ரத்யயோதிதேன' – சக்தியும் சிவமும் 'சத்' என்ற பதத்தின் பகுதியும் விகுதியுமாம். இது சிவாசாரியரின் பாஷியத்தில் ஒரு வசனம். அது சிவாத்வைதநிர்ணயத்தில், 'சத்தி சிவச்ச நத்வந்த்வ பிரகிருதி பிரத்யயோதிதௌ – சக்தியும் சிவமும் துவந்துவமில்லாத பகுதியும் விகுதியுமாம் எனத் திரித்து வைக்கப்பட்டிருக்கின்றது. இங்கு 'சத்' என்றதற்குப் பதில் 'நத்வந்த்வ' இருத்தல் காணலாம். சிவாசாரியரைப் புகழ எழுந்த நூலில் அவர் கொள்கைக்கு விரோதமான கருத்துக்கள் இருக்கக் காணின் அவை அயலார் கைவண்ணமாதல் தானே புலனாகும்.

இ) பாத்ம புராணத்திற் சிவகீதை என்பது ஒரு பகுதி. பெயர்க்கிணங்க, அது சிவமகிமை பேசுவது, அது அப்புராணத்தின் ஒருபகுதி என்பதற்கு, பிருஹந்நாரதீய புராணத்தில், பாத்ம புராணம் பற்றிச் சொல்லியிருக்கும் பகுதி ஆதாரமாம். ஐயர் ஆராய்ச்சி நிகழ்த்தியபோது அப்பகுதி பாத்ம புராணத்திலிருந்து விலக்கப்பட்டுவிட்டமை புலனாயிற்று. அந்நாளில் பாத்மபுராணம் மறுபதிப்புச் செய்தவராக அறியப்பட்ட H. N. ஆப்தே என்பவரிடம் ஐயர் அது பற்றி எழுதி விசாரித்தபோது ஆப்தே அளித்த பதில் வருமாறு:-

அன்புசால் ஐய!

தங்களது சென்றமாத 22 ஆந் திகதிக் கடிதம் பெற்றோம். பாத்மபுராணத்தைச் சிவகீதை என்று பாரம்பரியமாய்ச் சொல்வார்கள். நாம் பாத்மபுராணத்தைத் திருத்தி அச்சுக்குக் கொடுப்பதன் முன் ஒத்துப்பார்த்தற்காகச் சேர்க்கப்பட்டிருந்த முப்பதுக்கும் மேலான கையெழுத்துப் பிரதிகளில் ஒன்றிலேனும் சிவகீதையைக் கண்டிலேம். பாத்ம



புராணத்தில் அடங்கிய விஷயப் பெயர்கள் பிருஹந்நாரதீய புராணத்திற் காணப்படுகின்றன. அதிற் சிவகீதை என்றதும் உண்டு. இனி மற்றொருகால் நாம் பாத்ம புராணம் மறுபதிப்புச் செய்கையில், சிவகீதையையும் அநுபந்தமாகச் சேர்க்க எண்ணியுள்ளோம் – அன்புள்ள, H. N. ஆப்தே. என்பது கடிதம்.[42]

அந்நாளிற் சைவசித்தாந்த விளக்கத்துக்குப் பாதகமாம் வகையில் மேற்கொள்ளப்பட்ட அதிக் கிரமங்களின் இயல்பையும் அவற்றை வெளிக்கொணர்தல் சார்பிலான செந்திநாதையர் முயற்சியின் ஆக்க ஊக்கத்திறன்களையும் இவ்வுதாரணங்களால் நன்கு கிரகித்துக் கொள்ளல் கூடும். இங்ஙனம் அரிதின் முயன்று நீலகண்ட பாஷியத்தின் உண்மைரூபம் உலகறிய மொழிபெயர்த்தமைத்த ஐயரவர்கள் இயற்றிய மறுநூல்களான 'தேவாரம் வேதசாரம்", சைவவேதாந்தம் என்ற இரண்டும் இதன் நோக்குக்கு [illegible] துணையானவையாம்.

## தேவாரம் வேதசாரம்

சிவபரத்துவமும் சைவசித்தாந்த விளக்கும் புலப்படக் கூறும் தமிழ் நூல்களில் முதன்மையானவை சைவத் திருமுறைகள். இவற்றுட் பிரசித்தமான தேவார திருவாசகங்கள் வேதத்துக்கு இணையானவையாகா. இவை பிரதிபாதிக்குஞ் சிவம் வேறு. வேதங்கூறும் பிரமம் வேறு. இது உயர்ந்தது, அது தாழ்ந்தது. இது நிர்க்குணப்பிரமம், அது சகுணப்பிரமம். ஆதலால் வேதம் தேவார திருவாசகம் என்பவற்றுக்குச் சமத்துவங் கொடுத்தல் ஆகாது எனல் மாயாவாத ஏகான்மவாதிகளின் நிலை. அது, பத்ததி விதிக்கிரமமாகச் (42a) சிவாலய பூசையில் வேதமோதியதும் திருமுறை ஓதுதற்குள்ள வழக்கத்தையும் சம்பந்தப்பட்டவர்கள் பின்நாளில் மீறுமளவுக்குக் காழ்ப்பானதாயும் இருந்தது. இன்னும் அது நடைமுறையிலிருந்துவருவதும் கண்கூடு. பூசையில் வேத பாராயணம் முடிந்ததும் தேவார பாராயணம் அநுமதிக்கப்படுதற்கிடையில் பூசகர்கள் பத்ததி விதிக்கிரமமாகப் பின்நிகழ்தற்குரிய ஆசீர்வாதத்தை முன் நிகழ்த்தி விடுகின்றனர். தேவார பாராயணம் முடித்தே ஆசீர்வாதம் என்ற பிடி வற்புறுத்தப்பட்டுள்ள இடங்களிற் சிலவற்றிலும் தேவாரபாராயணம் அநுமதிக்கப்படுதற்கிடையில் சமஸ்கிருதத்தில் ஆராரோ இயற்றிய துதிப்பாடல்கள் புகுத்தப்படுகின்றன.

இந்நிலை நேர்தற்கு மூலகாரணமாம்படி ஏகான்மவாத மாயாவாதிகள் கொண்ட அக்கொள்கை விபரீதமானது ஆராய்ச்சி அறிவுக்கொவ்வாதது என்பதை நிலைநாட்ட ஐயர் தேவாரம் வேதசாரம் என்ற நூலை உருவாக்கினார். இந்நூலில் வேத உபநிடத புராண இதிகாசங்கள் தோறுங் காணப்படும் சைவ சித்தாந்தக் கருத்துக்களும் திருமுறைக் கூற்றுக்களும் நேருக்கு நேர் இடப்பட்டு அவற்றின் ஒப்புமைகள் விளக்கப்பட்டிருக்கின்றன.

**உதாரணம் :-**

ஸ்வதேக மரணிம் க்ருத்வா ப்ரணவஞ் சோத்தராரணிம்
த்யான நிர்மதனாப்யாசாத் தேவம் பச்யேந்நிகூட வத்–சுவே 1.14
திலேஷு தைலம் ததினீவ சர்பிரா ப:
ஸ்ரோதஸ் ஸுவரணீஷு அக்னி:– சுவே 1.15

(இவற்றுக்கு நேர்)

'விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுக் கோல்நட் டுணர்வுக் கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே.

– அப்பர் சுவாமிகள் தேவாரம்.

இதன் மூலம் திருமுறைகள் தமிழ் வேதம் என்ற நிலை செந்திநாதையரால் ஆகம அநுமானப் பிரமாணங்கள் வேண்டாது காட்சிப் பிரமாணமளவிலேயே வைத்துணர்த்தப்பட்டவாறு கண்டு கொள்ளப்படும்.

உபநிடதங்களிற் சைவசித்தாந்தப் பொருட் பண்புண்மை குறித்தெழுந்த பின்வரும் கூற்று இங்கு கவனிக்கத்தகும். உபநிடதங்களிலும் சைவ சித்தாந்த உண்மைக் கூறுகள் எல்லாமுண்டு. ஆனால் தொடர்ந்தேர்ச்சியாயில்லாமல் அங்கொன்று இங்கொன்று.[43]

## சைவ வேதாந்தம்

மேற்கண்ட இரு நூல்கள் பற்றிய முன்னறிவு ஐயரது மறு நூலாகிய சைவவேதாந்தம் பற்றி அறிவதற்கு நுழைவாயிலாம். வேதத்திற் சிவபரத்துவம் அடியோடில்லை என்ற தங்கொள்கைக் காதாரங்காட்டுமுகமாக ஏகான்மவாத குரவர் முதலியோர் வேதஞ் சார்பான நூல்களில் வலிந்து புகுத்திய மாற்றங்கள் இந்நூல் முதலத்தியாயத்தின் முதற் பன்னிரண்டங்கங்களில்



எடுத்துக் கூறப்படுகின்றன. இத்தேவைக்காக முற்கண்ட விதமான மாற்றங்களைவிட வேறு வகைப் புரளிகள் இடம் பெற்றுள்ளமையும் இங்குத் தெரிக்கப்படுகின்றது. மேல் 'அ' பிரிவில் ( VI ) ஆம் பகுதியிற் காட்டப்பட்ட, 'த்வா சுபர்ணா சயுஜா சகாயா.' என்ற உபநிடத மந்திரம், கடாகாச மஹாகாச உவமையைப்[44] புகுத்துவதற்காகத் திரித்துரைக்கப்பட்டுச் சிவ சீவ பேதம் உண்மையல்ல, கற்பிதமே என்று பிரமகீதை, உருத்திர ஹ்ருதயோபநிடதம், அன்ன பூரணியுபநிடதம் என்ற மூன்றிலுஞ் சேர்க்கப்பட்டிருக்கும் அந்தரங்கமும் அவற்றில் ஒன்றாகும். இன்னும் இதே பகுதியில், ஏகான்மவாதிகளால் மறுக்கப்பட்டுள்ளதும் பிரமத்துக்கு ஆனந்தமுண்டென்று தெரிவிப்பதுமான ஒருகருத்து ஆதாரபூர்வமாக உண்டென நிறுவப்பட்டுள்ளது. உபநிடதங்களிலேயே சைவசித்தாந்தம் வேண்டும் 36 தத்துவங்களும் இடம்பெற்றுள்ளமை தெரித்துத் தொகுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. ஏகான்மவாதிகளின் சகுணப்பிரமம் என்பது சைவசித்தாந்தத்திற் புருடதத்துவமெனப்படும் ஆன்ம தத்துவமே என்பதும் தெரிக்கப்பட்டுள்ளது. வேத சாஸ்திரங்களிற் பரமபதம் என்றிருப்பது சிவபதமே. பரமவியோகத்து அத்யக்ஷகர் சிவபெருமானே, காயத்திரிப்பொருள் சிவபெருமானே என்பன முதலாக வேதசாஸ்திரங்களிற் சிவபரத்துவம் விளங்குமாறும் பகிரங்கப்படுத்தப்பட்டுள்ளது.[45]

சைவசித்தாந்தத்தில் முக்கியத்துவம் பெற்றுள்ள விபூதி, உருத்திராக்கம், பஞ்சாக்ஷரம், சிவலிங்கார்ச்சனை, பதி பராசக்தி ஆன்மாக்களின் இலக்கணங்கள், சிவோபாசனை, சிவோகம் பாவனை என்பன பற்றிய விளக்கங்கள் உபநிடதங்களிலுஞ் சிவாகமங்களிலுஞ் சயச்சீராகத் திகழக்கிடக்கும் விதம் அடுத்துவரும் 14 பிரகரணங்களில் எடுத்துக் காட்டப்படுகிறது. இறுதியாகிய 16 ஆம் பிரகரணம், சைவவேதாந்தசார சைவசித்தாந்தப் பிரகரணம் என்ற பெயரில் அமைகிறது. இப்பகுதியில் வேதாந்தத் தெளிவே சைவசித்தாந்தம் என்ற நிலை வேத சிவாகம ஆதார ரீதியாக நிலைநாட்டப்படுகிறது.

இனி, இந்நூல் சைவவேதாந்தம் எனப் பெயர்பெற வந்த காரணம் ஆராயத்தகும்.

வேதாந்தம் என்னும் சொற்றொடர் வேதங்களின் இறுதிப் பகுதியாகிய உபநிடதங்களைக் குறிக்க எழுந்ததொன்று. அத் தொடர்பில் அவ் உபநிடதங்களுக்கு விஷயமாயிருந்துள்ள ஆன்மாநுபவஞானத்துக்கும் அது பெயராயிற்று. உபநிடதங்

களைக் குறிக்குமிடத்து அப்பெயர் காரணப்பெயராகவும் ஆத்ம ஞானாநுபவத்தைக் குறிக்குமிடத்துக் காரண இடுகுறிப்பெயராகவும் அமையும். உபநிடத வழியான அந்த அனுபவஞானம் எங்கள் சைவசாஸ்திரங்களுக்கு விரோதமானதல்ல. உபநிடதங் காட்டும் தியான சாதனைகளில் அழுந்தி அதனை அனுபவத்துக்குக் கொண்டு வந்தவர்கள் வேதாந்திகள் எனப்பட்டார்கள். அவர்களே உண்மை வேதாந்திகள். அவர்களுக்குஞ் சைவ சித்தாந்திகளுக்கும் பேதமில்லை. 'வேதாந்தஞ் சித்தாந்தம் வேறென்னார் கண்களிக்கும் நாதாந்தமோன நலமே பராபரமே' எனத் தாயுமான சுவாமிகள் கூறியுள்ளது அதைக் குறித்தே. அதற்கேற்றாற் போல் வேதங்களுக்கும் சிவாகமங்களுக்கும் உண்மையிற் பேதமில்லை. 'வேத சிவாகமயோர் பேதம் நபச்யாம:' என நீலகண்ட சிவாசாரியர் கூறியது அதனையே. இவ்வாறாக, தத்தமில் அறிவுமதம் மேற்கொள்ளப் பெற்று உபநிடதங்களில் இயல்பாக உண்டெனப்பட்டவற்றை இல்லையென்றும் இல்லாதனவற்றை உண்டென்றும் காட்டுதற் கிசைவாக அவற்றைத் திரித்துப் பொருள் கூறிப் பிரசுரித்த ஏகான்மவாதிகள் மாயாவாதிகளுந் தம்மை வேதாந்திகள் என்று கூறிக் கொண்டார்கள். வேதசாஸ்திரங்களிற் சிவபரத்துவம் பேசப்படவில்லை என்ற எடுகோளை அவர்களே கொண்டு காவி ஆராதித்தனர். அதற்கேற்பத் தங்கள் கொள்கை பிரம வேதாந்தம் என்றும் முழங்கினர். இந்நிலையில் உண்மையிதுவல்ல. பிரமபரத்துவமென நூதனபரத்துவம் ஒன்றை அவைகள் கொண்டிக்கவில்லை. எப்போதைக்குமுள்ள அநாதியான சிவபரத்துவத்தையே அவைகள் நிலைநாட்டின என்று காட்டுவதே செந்திநாதையரின் குறிக்கோள். அதற்கேற்பவே அவர் இந்நூற்குச் சைவவேதாந்தம் எனப் பெயரிட்டுக் கொண்டார்.

"சைவ வேதாந்தம் என்பது சிவபெருமானைப் பிரதிபாதிக்கும் வேதாந்தம். சைவசமயிகளுக்குரிய வேதாந்தம் எனவும்படும்." இது இந்நூல் முகப்பிலுள்ள உபோத்காதத்திலேயே காணப்படும்.

இவற்றைவிடவும், சைவசித்தாந்த தத்துவப்பட விளக்கம் என்பதுமொன்று தயாரித்து விசிட்டாத்வைத ஏகான்மவாத மாயாவாத நிலைகளைச் சைவசித்தாந்த நிலைக்கெதிர் வைத்து ஒப்பு நோக்கும் வாய்ப்பையும் அளித்துள்ளார் செந்திநாதையர்.



## சேர். பொன். இராமநாதன்

சேர். பொன். இராமநாதன் பலதுறை அறிவியல் விவேகியாய்த் திகழ்ந்தமை பிரசித்தம். அவர்க்கு வெகு பிரசித்தியளித்த அரசியல் நீதித்துறைகளில் மட்டுமன்றிக் கல்வியியல், சமயவியல் தத்துவ ஞானவியல்களிலும் அவர் பூரண ஆளுமை உள்ளவராகவே திகழ்ந்துள்ளார். தஞ்சாவூர் அருட்பரானந்த சுவாமிகளுடன் கொண்ட தொடர்பிலிருந்து அவர்பால் விட்டு விளாசிய சைவ மெய்யியலும் ஒப்புயர்வற்ற ஆளுமைத்திறம் உள்ளதேயாயிற்று. சென்னைச் சைவசித்தாந்த மஹாசமாசம் 1905 இல் சிதம்பரத்தில் நிகழ்த்திய அதன் முதலாவது மகாநாட்டுக்கு இவரே தலைவராக அன்றைய அறிவியல் மேதைகளால் வரிக்கப்பட்டிருந்தமை அவரின் மெய்யியல் விளக்க ஆளுமைக்குப் பேரத்தாட்சியாயிற்று. அன்றைய சைவ மெய்யியல் மேதைகள் அனைவரையுந் திருப்திப்படுத்தக்கூடிய அளவு சைவசித்தாஞானவானாக அவர் அறியப்பட்டிருந்தமை இதனாற் புலனாம். இதிலும் பார்க்கப் பன்மடங்கு விகாசமாக அவரது சைவசித்தாந்த அறிவியல் மேதை விட்டுவிளாச நிலைக்களமாயிருந்தவை 1905, 1906 களில் அவர் மேற்கொண்டிருந்த அமெரிக்கச் சுற்றுலாப் பேருரைகள் எனலாம். அதன் விபரம் வருமாறு !

1893 ஆம் ஆண்டு இந்து மதப் பெருமை அகிலப் பிரசித்தி பெற்ற காலம். அவ்வாண்டு சிக்காகோ நகரில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த அகிலமத பாராளுமன்றத்தில் சுவாமி விவேகானந்தர் ஆற்றிய பேருரைகள் சமயஞான உலகிற் பெரியதோர் விழிப்புணர்வைத் தோற்றுவித்திருந்தன. அதனால் அதிக அளவிற் பாதிக்கப்பட்டிருந்தது, அமெரிக்க ஆன்ம விசாரணையாளர் சமுகம். அச்சமுகம் அன்றிலிருந்தே ஆன்ம விசாரந் தீர்ப்பதற்குத் தமது சமயச் சார்பான அறிவு சாதனங்கள் பற்றாக்குறையாயிருப்பதாக உணர்ந்து விவேகானந்தர் மூலந் தமக்கு அறிமுகமான இந்திய தத்துவ ஞானத்திற் கரிசனைகொண்டு ஆங்காங்கு ஸ்தாபன ரீதியாகத் தம்மிற் கூடி அதை விசாரிக்கும் முயற்சியில் ஈடுபட்டு வந்திருப்பதாகத் தெரிகிறது. சிலசில பகுதிகளில் தனிப்பட்ட பரம்பரை ரீதியாகவும் அது தொடர்ந்து வந்திருக்கும் என நம்புதற்கிடமுண்டு. இந்நாளில் அமெரிக்க ஹவாய் நாட்டிற் சைவசித்தாந்த ஆதீனம் அமைத்து அகிலமளாவிய ரீதியில் சைவப்பிரசாரமியற்றி வரும் சிவாய சுப்பிரமுனிய சுவாமி, தமது சொந்த ஊராகிய

கலிபோர்ணியாவில் விவேகானந்தர் போதனையின் வழி இந்திய தத்துவஞான விசாரஞ் செய்யும் மரபில் வந்த ஒருவரின் செல்வாக்குக் காரணமாகவே தமது சமய கலாசார நிலைகளில் திருப்பம் ஏற்பட்டதாகக் கூறுவதிலிருந்து இது உறுதியாகும்.

அத்தகைய ஆன்ம விசாரணையாளர் காலத்துக்குக்காலம் அடிக்கடி ஆள்மாறிஆள் இந்தியாவுக்கு வந்து போய்க் கொண்டிருந்தனர். குறித்த சுப்பிர முனியசுவாமியும் அதே பாணியில் இந்தியாவுக்கு வந்து அத்தொடர்பில் இலங்கையையும் நாடிய வகையால் யாழ். யோகர்சுவாமிகளோடு தொடர்பு கொண்டு தமது இயற்பெயரான பொப். ஹம்சன், சுவாமிகள் வாக்கால் சுப்பிரமுனி ( வெள்ளை முனிவர் ) ஆக மாற்றமுறப் பெற்றவர். இவர் வரவுக்குப் பல தசாப்தங்களுக்கு முன் அதாவது 20 ஆம் நூற்றாண்டின ஆரம்பகாலத்திலேயே ஆன்ம விசார நோக்கில் இந்தியாவை நாடி அங்கெங்குந் திருப்தி பெறாமல் எப்படியோ திரு. இராமநாதனைப் பற்றி அறிந்து, கொழும்பு வந்து அவர் போதனையால் தமது ஆன்ம தாகத் தீர்வில் திருப்தியுற்று அமெரிக்கர் ஒருவர், மிறன் ஃவல்ப் (Myron Phelp) என்பவர். (லீலாவதி – இராமநாதன் போல ) அவ்வகையில் தாம் பெற்ற இன்பம் தமது அமெரிக்க சகோதரர்களும் பெறவைக்கும் ஆர்வத்தினால், திரு. மிறன் ஃவல்ப் நாடுதிரும்பியதும் அவசர அவசரமாக மேற்கொண்ட ஏற்பாடுகளின் விளைவாக திரு. இராமநாதனின் அமெரிக்கச் சுற்றுலாப் பேருரைகள் நிகழ்வனவாயின. அமெரிக்கரின் சுவசமய வேதமாகிய பைபிளின் மேற்கோள் பரிபாஷைகளில் வைத்தே தமது பேருரைகளின் போது அவர் சைவசித்தாந்த ஞானவிளக்கத்தை அவர்களுக்குப் புகட்டாமற் புகட்டிவைத்த அரிய விபரம் நமக்கும் நம் பிற் சந்ததிக்கும் எட்டத் தக்கவாறு இருவேறு நூல்களில் தேக்கப் பட்டுள்ளது. ஒன்று, அன்று அவர்க்கு அந்தரங்கக் காரியதரிசியாய் உடன் சென்றிருந்த[46] R. L. ஹரிசன் ( பின், லீலாவதி – இராமநாதன் ) அம்மையார், அவரது பேருரைகளை உடனிருந்து கேட்டுத் தொகுத்தமைத்த, கீழைநாட்டு மாணவர்களுக்கான மேலைநாட்டுக் காட்சிகள். ( The western pictures to eastern students ) என்ற நூல். மற்றையது குறித்த 'மிறன் ஃவல்ப்' என்பவர் திரு. இராமநாதனின் பிரசங்கசாரங்களை மட்டும் தனியாகத் தொகுத்து வெளியிட்ட ஆன்ம கலாசாரம் ( Soul culture ) என்னும் நூல்.[47] அவற்றை ஆதாரமாகக் கொண்டு, அவர் உரைகளிற் சைவசித்தாந்த அறிவியல் மேதை திகழுமாற்றைச் சிறிது காண்போம்.



இராமநாதனின் சைவசித்தாந்த ஞானபோதனை விலாசம் அவர் பிரயாணத்தின்போது இங்கிலாந்திலிருந்து அமெரிக்காவுக்குப் புறப்பட்ட கப்பலிலேயே களைகட்டியிருக்கிறது. அக்கப்பலில் ஏற்பாடான கடற்சிப்பந்திகள் நலன்புரிச் சங்கக் களியாட்ட விழாவொன்றுக்கு இவருக்கும் அழைப்புவிட அமெரிக்கர் ஒருவர் அணுகினார். அப்போது அவர் திரு. இராமநாதன் தங்கள் விழாவிற் பங்குபற்றி ஒரு பாடலோ, ஆடலோ உரையோ நிகழ்த்த வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். உரை நிகழ்த்துவதேல் அது இந்தியா பற்றியதாயிருத்தல் நலம் எனவுந் தெரிவித்துக் கொண்டார். அப்போது இடம்பெற்ற சம்பாஷணையின் வடிவம்:

இராமநாதன் – இந்தியா ஒரு பெரிய நாடு. அதுபற்றி எப் பொருளிற் பேசலாம் எனத் தெரியவில்லை.

அமெரிக்கர் – அமெரிக்கராகிய நாங்கள் இந்தியாவில் எப் படிப் பணஞ் சம்பாதிக்கலாம் என்பது பற்றிப் பேசினால் நலம்.

Almighty doller with a shining face
Behold thy wonderous power
My pocket is thy resting place
I need thee every hour

இரா : நல்ல பாட்டு. உது யாருடைய பாடல்?

அமெ : இதை நானே இயற்றினேன்.

இரா : இதில் நீர் அளவற்ற மகிழ்ச்சியடைகிறீர். ஆனால் 'டொலர்' கடவுளல்ல.

அமெ : 'டொலர்' பெரிதல்லவெனில் நீங்களும் நானும் இவ்வளவு சொகுசாக இக்கப்பலில் முதலாம் வகுப்பிருக்கையிற் பயணஞ் செய்வதெங்ஙனம்?

இரா : ( புன்சிரிப்போடு ) நீங்கள் இந்தியாவுக்குப் போனால் விரும்புமளவு பணம் சம்பாதிக்கும் வழிகள் அநேகம் உண்டுதான். அப்பணங் கொண்டு நீர் செய்ய இருப்பதென்ன?

அமெ : ஏன், நான் இந்தியாவில் வங்கி ஒன்று திறப்பேன். அதற்குப் பங்குதாரர் பலரைச் சேர்ப்பேன். அதன் சார்பில் இங்கிலாந்திற் கொம்பனி ஒன்று நிறுவிப் பொருளாட்சி பெறுவேன். பிறகு இந்தியாவில் 'டிறாம் கார்' போக்குவரத்தை ஏற்படுத்தி அதன்வழி முன்னேறுவேன்.

இரா : சரி அதற்குப் பிறகு . . . . ?

அமெ : என் பிள்ளைகளைப் படிப்பித்து அவர்கள் தம்வாழ்வில் என்னிலும் பார்க்கக் கூடுதலான வசதிகளோடிருக்க ஆவன செய்வேன்.

இரா : அப்படியே ஆகி உமக்கும் எழுபது, எண்பது வயதுப் பராயமாகி, மிதமிஞ்சிய சொத்துப் பெருக்கத்தினால் பிள்ளைகளும் மதிமயங்கி நெறிகெட்டுத் தலையழிந்த பிறகு . . . . . . . . ?

இந்த அளவில் அந்த அமெரிக்கர் தீவிரமாகச் சிந்திக்கும் நிலைக்குத் தூண்டப்பட்டு, ஆமாம், பிள்ளைகள் அப்படிக் கெடுவதும் உண்டுதான் என உடன்பட்டுக் கொண்டு விழாவிற் சமுகமளிக்க இராமநாதனின் சம்மதத்தைப் பெற்றுக் கொண்டு விலகிவிட்டார்.

உலகியலில் நிலையாமை பற்றிய உணர்ச்சியே ஆன்ம ஞானவிசாரத்தின் அடித்தளம். திரு. இராமநாதன் அமெரிக்காவில் எழுப்ப இருக்கும் சைவசித்தாந்த ஞானக்கட்டிடத்துக்குப் பொருத்தமான அத்திபாரம் இங்கே இடப்பட்டுவிட்ட காட்சி புலப்படுகிறது.

குறித்த விழாவில் நிகழ்ந்த இராமநாதனுடைய உரையின் ஆரம்பவசனம், ‘ நாங்கள் எல்லாரும் பிரயாணிகள் ’ என்பது, பேச்சுத் தொடர்கையில், எம்மிற் பலர் வெவ்வேறு நாடுகளின் காட்சியின்பத்திலேயே ரமிக்கிறோம். இந்தியாவிலும் மக்கள் பிரயாணிகளாகவேயிருக்கிறார்கள்.

ஆனால், அவர்கள் பிரயாணம் காட்சியின்ப நோக்கினதல்ல. அது காரியக்கண்ணான பிரயாணம். அவர்களின் பிரயாண மெதுவும் ஏதுமொரு கோயில் தலத்தை நோக்கியதும் வழிபாட்டு நோக்கங் கொண்டதுமாகவேயிருக்கும். ஐம்புல இன்பப் பேறு நோக்கமான எந்தச் செயலும் வெட்கக்கேடான காரியமாகவே இந்தியாவிற் கணிக்கப்படும். அது சும்மா மிருக சுபாவத்தின் அறிகுறி என்பது இந்தியர் கருத்து. இந்தியாவிற் பிரயாணி ஒருவனுக்குக் கையடக்கமான ஒரு சிறு உடுப்புப் பெட்டியே போதும். இந்தியா முழுவதும் போய்வர அவனுக்கு ஒரு நூறு ரூபாவே போதும். ஆகக் குறைந்தபட்சமான வாழ்க்கை வசதிகளோடு திருப்தியடைவது அவனியல்பு. எங்கேனும் ஒரு



கோயிலில் வழிபடுவதே அவன் முதல் வேலை. உணவு இரண்டாம் விஷயம். இவ்வகையில் வாழ்க்கை வசதிகளைச் சுருக்கி ஆலயவழிபாட்டுணர்வைப் பெருக்கி அதன் மூலம் உயிருட்டமான அன்பையும் ஞானப்பிரகாசத்தையும் பெறுவதே இந்தியன் வாழ்வியலின் முக்கிய நோக்கமாம்.

அன்பு விருத்தியே உண்மை வாழ்விலட்சியம் என்பதை அறிவீராயின் தன்பால் அன்பு பிறன்பால் அன்பாய்ப் பிறன்பாலன்பு இறையன்பாய்ப் பரிணமிப்பதே வாழ்வியல் மாண்பு என்பதை உணர்வீராயின் ஐம்புல இன்பத் திருப்தியின் பொருட்டுப் பணம் சம்பாதிப்பதே வாழ்வியற் கடமையென்ற உங்கள் நோக்கு எவ்வளவு கீழ்த்தரமானதென்பதை நீங்கள் உணர்தல் கூடும். மறுபக்க நோக்கில் பணச்சம்பாத்தியம் வாழ்வியல் நோக்கின் முடிந்தமுடிபாகாது. முடிந்த முடிபுக்குச் சாதனமான தர்மவிருத்திக்கும் பரோபகாரத்திற்கும் ஆன்மீக ஈடேற்றத்திற்கான நிலையங்களைப் பராமரித்தற்கும் உரியதென அறிவீர்களாயின் நீங்களதனை ‘ மில்லியன் ’ கணக்கிலல்ல, ‘பில்லியன்’ கணக்கிற் சம்பாதிக்கலாம் என்பேன்.

அவ்விழாவிற் கரகோஷத்துடன் வரவேற்கப்பட்ட உரைப் பகுதி இதுவாயிற்று. வாழ்விலட்சியம் இது, அதற்காம் வழியிது என்ற இவ்வுரையிற் சைவசித்தாந்த அடிப்படை உண்மைகளில் ஒன்று சொல்லாமலே சொல்லப்பட்டுக்கிடத்தல் காணலாம். தொடர்ந்து தனிப்பட்ட கேள்விகளுக்கு விடைகளும் அளிக்கப் பட்டன.

கே : உங்கள் சமயம் யாது? இந்திய மக்களுக்கு உண்மையான சமயமில்லை என்கிறார்கள். அப்படியா?

வி : எமது சமயத்தை இந்து சமயமென மேல்நாட்டிற் கூறுகின்றனர். நாங்கள் அதை அப்பெயரால் அழைத்ததில்லை. நாம் அதைச் சைவம் அல்லது சைவமார்க்கம் என்று அழைப்போம். அது அகிலஉலகுக்கும் பொதுவான ஒரே கடவுளை வணங்குஞ் சமயம். அக்கடவுள் சிவம். ஒரே அமைதியும் ஒரே ஆற்றலும் வாய்ந்ததென்பது அப்பெயர்க்குப் பொருள்.

கே : உங்கள் மக்கள் நீர்மூழ்குதல் ( immersion ) சமயக்கடமையாகக் கொள்ளும் வழக்கத்தில் நம்பிக்கை உள்ளவர்களா ?

வி : ஆம். ஆனால், மேல்நாட்டார் கருதுவது போல அர்த்த மற்ற வெறுஞ் சமயக் கடமையாகவல்ல. நாங்கள் மனித அன்பு இறையன்பாகிய அருளில் முழுகுதலாகிய ஆன்மீக அர்த்தத்திலேயே அதில் நம்பிக்கை கொண்டுள்ளோம். சும்மா உடம்பைத் தண்ணீரில் அமிழ்த்துதலில் மட்டும் நாம் திருப்தி கொள்வதில்லை. அதனால் உடல்பெறும் பயன் பிரமாதமாக எதுவுமில்லை. ஆன்மீக உணர்வே அதனால் தூய்மை அடைகிறது. தீர்த்தமாடுதல் எனப்படும் இக்கொள்கை உயிர் நலம் கருதியேயன்றி, உடல் நலங் கருதியன்று.

கே : உங்கள் மக்கள் வழிபாட்டுக்கென்று நாள் குறித்திருக்கிறார்களா?

வி ; அவர்கள் எல்லாநாளுமே வழிபாட்டு நாட்களாகக் கொண்டுள்ளார்கள். அவர்களின் தினசரி வாழ்க்கை கடவுள் வழிபாட்டோடே தொடங்கிக் கடவுள் வழிபாட்டோடே முடிகிறது. குதிரை வண்டிக்காரன் கூடக் கடவுளை நினைந்து கைகூப்பாமல் தன் ஆசனத்தில் ஏறுவதில்லை. ஒரு சாதாரண தொழிலாளியைக்கூட அவனது சுய சமயப்போக்கிலிருந்து திருப்புவது மஹா கஷ்டம். அவன் வழிபாட்டுக்காகவே வாழ்கிறான். மேல் நாட்டார் விஷயத்தில் அது அப்படியல்ல.[48]

இந்த மூன்று விடைகளிலும் வைத்துச் சிவன் இலக்கணமும் 'அத்தா உன் அடியேனை அன்பால் ஆர்த்தாய்! அருள் நோக்கில் தீர்த்த நீராட்டிக் கொண்டாய்', 'அளித்து வந்தெனக் காவலென்றருளி அச்சந் தீர்த்த நின் அருட் பெருங்கடலிற் திளைத்துந் தேக்கியும் பருகியுமுருகேன்', 'ஆர்த்த பிறவித் துயர்கெட நாம் ஆர்த்தாடுந் தீர்த்தன்' எனத் திருமுறை பேசுந் தீர்த்த லக்கணமும் அன்றாட வாழ்விற் சமயமென்ற அம்சமுமாக முக்கியமான சைவசித்தாந்த விளக்கங்கள் மூன்று இடம்பெற்றுவிட்டன. இதன்மூலம் அவர் சென்ற கப்பல் கரை சேர்ந்ததன் மேல் அமெரிக்காவில் இடம்பெறப் போகும் சைவ சித்தாந்த விளக்கப் போக்கு எப்படி இருக்குமென்பதற்கான சூசகம் புலனாகின்றது.

அமெரிக்காவையடைந்ததும் 'கிறீநாகர்' என்ற நகரில் ஏற்பாடான பருவகால மகாநாட்டுக்கு அழைக்கப்பட்டு அமோக வரவேற்புப் பெற்ற இராமநாதன் அங்கு ஆற்றிய உரைப்



பொருள், 'கடவுள் எல்லாவற்றையும் விழுங்கும் நெருப்பு' God is a Consuming Fire என்பது. அன்று நிகழ்ந்த ஒன்றரை மணித்தியாலவுரையில் 'நின்ற நெற்றிக்கண் உடையதோர் நெருப்பே' எனப்பட்ட சிவன் எல்லாவற்றையுந் தன்வசமாக்கிக் கொண்டு ஒன்றுக்குந் தான் வசமாகாது நிற்கும் பரத்துவ இலக்கணம் தெளிவாக்கப்பெற்றது. கேட்டிருந்த பெருங்கூட்டம், 'எங்கள் வாழ்வில் எங்கள் ஆத்மீக உணர்வைத் தட்டியெழுப்பிய ஒரு உரையை இன்றுதான் கேட்டோம்' என்ற பாராட்டுடன் அவரைச் சுற்றிச்சூழ்ந்து விடாதாயிற்று. இராப்போசன வேளையாயிற்றெனச் சாட்டுக்கூறி அவரைத் தந்திரமாக விடுவிக்க வேண்டியிருந்ததாகச் செய்தி.[49]

திரு. இராமநாதன் ஏலவே கிறீஸ்தவவேதமாகிய பைபிளில் கூர்ந்த ஆராய்ச்சியுணர்வு மிக்கவராய் இருந்துள்ளார். இங்கு கொழும்பிலிருக்கும் போதே அது சார்பான சுவிசேஷங்கள் இரண்டுக்கு வியாக்கியானஞ் செய்து நூலாக வெளியிட்டுமிருந்தார். மேல் நாட்டு ஆன்மவிசாரிகள் R. L. ஹறிசன், மிறன் ஃவல்ப் முதலியோர் அவரைத் தேடியணையக் காலாயிருந்ததும் அதுவே. பைபிளில் வரும் பரிபாஷைகள் சில கிரேக்க மொழியிலிருந்து ஆங்கிலத்துக்கு மொழிப் பெயர்க்கப்பட்டதில் தவறுகள் இருப்பது அவரது சைவசித்தாந்தக் கண்நோக்கிற்குப் புலனாயிருந்துவந்துள்ளது. அதன்சார்பில் ஆங்கில மொழி பெயர்ப்புக்கு மூலமான கிரேக்கத்திலும் அதற்கு மூலமான 'ஹேபுறா' விலும், சம்பந்தப்பட்ட வார்த்தைகளின் இயல்பான பொருள் நிலைகளையும் தம்முள்ளுணர்வாற் கண்டு விளங்கியிருந்தார். அமெரிக்காவில், 'யாலே' சர்வகலாசாலையில் அவர் வரவேற்கப்பட்டவேளை அங்கிருந்த கிரேக்கமொழிப் பேராசிரியரைச் சந்திக்க நேர்ந்தமை அவருக்குப் பழம் நழுவிப் பாலில் விழுந்தாவொத்த ஒரு இனிமைதருஞ் சந்தர்ப்பமாயிற்று.

அவருடன் உரையாடுகையில், பைபிள் ஆங்கில மொழி பெயர்ப்பில் ஏற்பட்ட தவறுகளினால் கிறீஸ்தவ உலகுக்குப் பேரிழப்பு நேர்த்திருக்கிறது என்றார் இராமநாதன். பேராசிரியர் அதை ஒத்துக்கொண்டு மேல் தொடர்கையில், அதில் வரும் Monogene Quios என்ற பதத்தில் மொழிபெயர்ப்பாகவுள்ள only Begotten Son - யேசு ஒருவரே தேவகுமாரன் என்பது, எல்லோரும் கிறீஸ்துவுக்கு மகனாகும் உரிமையுண்டு என்ற இயேசுவின் போதனைக்கு முரணாகத்தான் இருக்கிறதென்றார், அப்போது.

இரா : அப்பதம் Alone Become son என மொழி பெயர்க்கப் கப்படுவதை ஆட்சேபிப்பீர்களா?

பேரா : அதிற் பழுதில்லை. அது அப்படியிருத்தலை ஆட்சேபிக்க மாட்டேன்.

இரா : எனில் கிரேக்க – இங்கிலிஷ் அகராதிகர்த்தர்கள் ஏன் அந்த அர்த்தத்தைக் காட்டவில்லை.

பேரா : அது காட்டப்படாமல் விடுதற்கு நியாயமில்லை. ஆனால், அவர்கள் அதைச் செய்யவில்லை.

இரா : அகராதிகர்த்தர்கள் ஆன்ம ஞான விளக்கக் குறைபாட்டினாலே தத்துவச் சொற்களின் உட்பொருள் தெளிய மாட்டாராய்ப் பருமட்டமான தம் விளக்கத்திற்கேற்ப மொழிபெயர்ப்புச் செய்துள்ளார்கள். ஆழ்ந்த மறை ஞான அனுபவ ஒளியில் Monogene என்ற பதம் தனித்தல் (become alone) என்ற பொருளுணர்த்தற் பாலது. அது யோக நிலையில் உயிர் தன் அனுபவத்தில் தனிமைப்பட்டிருக்கும் நிலையை அல்லது தன் தநுகரணத் தொடர்பிலிருந்து பிரிந்திருக்கும் நிலையைக் குறிக்கும். இதுவே alone Become Son என்பதன் விளக்கமாகும். இந்திய ஞானிகள் இதனைக் கைவல்யம் என்று சொல்வர். கேவலம் – தனிமை, கைவல்யம் தனியாந் தன்மை. இதன் சார்பில் தான் துறவுக் கோட்பாடு ஆன்ம விசாரமுடையார்க்குப் பொருத்தமாக நேர்ந்திருக்கிறது.

பேராசிரியர் இது கேட்டுப் பரமதிருப்தியுற்று இம்மொழி பெயர்ப்பே சரியானது; தழுவப்பட வேண்டியதென ஏற்றுக் கொண்டார். அத்துடன், அது அவ்வாறிருக்கும் பட்சத்திலேயே, 'உனது தந்தை சுவர்க்கத்திற் பூரணனாயிருப்பது போல் நீயும் பூரணனாயிரு' – என்ற யேசுவின் வார்த்தை நடைமுறைக்கொத்த பொருள் பயப்பதாகும் என்ற மேலதிக விளக்கத்தையும் இராமநாதன்வாய்க் கேட்டுக் களிபேருவகையுற்றார். 'கைவல்ய ஞான நீதி' என்ற சைவசித்தாந்த நுண்பொருள் இராமநாதன் மூலம் எங்கெல்லாம் போய் என்னவெல்லாம் விளைத்திருக்கிறது என்று எவரும் ஒருகணமேனுஞ் சிந்தித்து வியக்கவைக்கும் இது.

இதன்மேலும் தொடரும் இராமநாதன் Pistice என்ற கிரேக்க பதம் faith என மொழி பெயர்க்கப்பட்டிருப்பதைச் சுட்டிக்காட்டி, (இது இப்படியானால் சந்தர்ப்பாநுசாரமாக) இருதய பூர்வமாகக் கடவுளை அன்பு செய்தல் என்ற உயர் கோட்பாடு, கடவுளில் நம்பிக்கை வைத்தல் என்ற சாமானிய கோட்பாடாகுமளவுக்கு நலிவுற்றுக் கடவுளில் நம்பிக்கை வைக்க இயலாதவர் சமயத்தைக் கைவிடுமளவுக்குப் பழுது செய்துவிடும் என்று குறிப்பிட்டுவிட்டு,



இரா : Pistice என்ற சொல் Love என மொழிபெயர்க்கப் படலாகாதா?

பேரா : ஆகாது, அப்படிச் செய்ய முடியாது.

இரா : அப்படிச் செய்ய முடியுமென்பதை நீங்கள் ஒத்துக் கொள்ளச் செய்ய என்னால் இயலும்.

பேரா : இல்லை ஐயா, அங்ஙனம் நீங்கள் என்னை ஒத்துக் கொள்ளச் செய்ய முடியாது. Pistice என்ற பதத்தை Faith என்று மட்டுந்தான் மொழிபெயர்த்துக் கொள்ள முடியும்.

இந்நிலையில் இராமநாதன்,

சென்ற் மத்யு எழுதிய சுவிசேஷத்தில் பகுதி XXIII-23ல், Spiritual discernment என்ற பதம் Crisis, mercy and pistice என அர்த்தங்கொள்ளப்பட்டிருப்பதையும் லூகே 11 . 42 இல், நேரொத்த சந்தர்ப்பத்தில் அது agape என்ற பெயரில் வந்திருத்தலையும் முதலில் இணைத்துக்காட்டி விட்டு pistice என்ற பதத்துக்கு agape என்பது பொருளொத்த பதமாக இவ்விணைப்பிலிருந்து தெரிய வருதலினாலும் agape க்குப் பொருள் love எனல் நியதமாயிருத்தலினாலும் pistice என்ற பதத்துக்கும் பொருத்தமான பொருள் love என்பதே என நிரூபணஞ்செய்து, 'கிருதகிருத்தியனாய்'[50] நின்றார். பேராசிரியர் இதயங்கனியச் சிரித்தவாறே இப்படியானவொரு நிரூபணத்தைத் தாம் சிறிதும் எதிர்பார்த்ததில்லை எனக் கூறித் தான் இதனை ஒத்துக் கொண்டே விட்டதையும் உறுதிப்படுத்தி நின்றார். சரியைக் கூர்த்தறியும் இராமநாதனின் தீக்ஷண புத்திநலம் இருந்தவாறு.[51]

இதனாலுணரக்கிடப்பதென்? பாரம்பரிய கிரேக்கமொழியறிவியல் நிபுணரான அகராதிகர்த்தர்கள் monogene என்ற பதத்தின் உள்பொருள் காணமுடியாதிருந்திருப்பவும், புகழ் பெற்ற 'யாலே' பல்கலைக்கழகக் கிரேக்கமொழிப் பேராசிரியர் pistice – agape – love என்ற பதங்களின் பொருளொப்புமையை அதுவரை உணரமுடியாதிருந்திருப்பவும் அந்நிய மொழியான

ராகிய ஒரு இராமநாதன் அவற்றின் உண்மையைத் துணிகரமாக எடுத்துணர்த்த வைத்தது அவரது சைவசித்தாந்த அறிவியல் மேதையே என்பது இதனாற் செவ்விதின் உணரப்படுகிறது. ( இது முன்னுரையினுங் குறிக்கப்பட்டுள்ளது ) மேலும், இந்திய ஞானக்கோட்பாடாகிய 'கைவல்யம்' என்ற மெய்யியற் பொருள் விளக்கம், இனி, இந்திய எல்லை தாண்டிப்போய் அமெரிக்காவில் மட்டுமன்றி அனைத்துக் கிறீஸ்தவ அறிவுலகிலும் பரிமளிக்க வசதியும் வாய்ப்பும் நேர்ந்திருக்கிறது. இது சைவ சித்தாந்த விளக்கத்தின் ஒரு கூறு, அகில உலக மட்டத்தில் வியாபிக்க வைத்தமையாகிய திரு. இராமநாதனின் சேவை நலமாவதற்கையமில்லை.

போஸ்ரன் நகரில் யூத இனத்தார் நடாத்திய மகாநாடு ஒன்றுக்குத் திரு. இராமநாதன் அழைக்கப்பட்டிருந்தார். சுவதேசத்தையிழந்து அன்று உலகெலாஞ் சிதறிவாழும் யூதஇனத்தார் தம்முள் ஒன்றுபட்டுச் சொந்தப்பூமியாகிய ஜெருசலேமைக் கைப்பற்றுதல் சார்பானது அம்மகாநாடு. அம்மகாநாட்டில் உரையாற்றுகையில், திரு. இராமநாதன், பூதசாதியார் தமது தேசியத்தைக் கைநெகிழ்ந்து, சேர்ந்த சேர்ந்த நாட்டினமாய் மாறிவரும் நிலை ( Denationalization ) அச்சாதிக்குப் பேரவமானமாம் என்பதை வற்புறுத்தியதுடன் சைவசித்தாந்த உண்மையொன்றுக்கு நல்விளக்கம் தருதற்கு அதைத் தகுந்த சந்தர்ப்பமுமாக்கிக் கொண்டார்.

சதா புறவியாபாரங்களிலீடுபட்டுச் சிதறிப்போய்க் கொண்டிருக்கும் பொறிபுலன்கள் உள்முகமாகத் திரும்பி ஒருங்கொத்துச் சிவத்தியானத்துக்குதவின் அது ஆன்ம ஈடேற்றநலனுக்காம் – என்பது சைவசித்தாந்த உண்மைகளிலொன்று.

இதைப் பீடிகையாகக் கொண்டு அங்கு உரையாற்றும் இராமநாதன், மக்கள் சுயதேசத்தைப் பிரிந்து வாழ்தல் என்ற விஷயம், நமது எண்ணங்கள் நமக்கு இன்றியமையாத கடவுளைச் சேவிப்பதில் ஒன்றுபட்டுப் பலன்தரும நிலைக்கெதிராக உலகமுகப்பட்டுழல்தல் மூலம் இல்லாத பொல்லாத தொல்லைகளுக்காளாதல் போல்வதாகும் என்பது நமது விளக்கமாகும். எமது அறிவு, செயல்களானவை உயிரனைய கடவுளைச் சேவிப்பதற்கெதிர் வெற்றுடலனைய உலகியலைச் சேவிக்கும் நிலையிலுள்ளன. இதில் வைத்து நோக்குங்கால், 'எருசலேமுக்குத் திரும்புங்கள்' என்ற பைபிள் வசனம் ஆத்மீக நோக்கில் அனைவருக்கும் பொருந்துவதாதலுடன் லௌகிக நோக்கில் யூதஇனத்துக்கு விசேடமாகப்



பொருந்துவதுமாம். யூதமக்கள் சுவநிலத்தைவிட்டுப் பிரிந்து மறுநாடுகளிற் சீவனோபாயந் தேடிப்போய் மாய்கின்றார்கள். இந்திய ஞானிகள் இதன் ( பைபிள் வசனத்தின் ) அந்தரங்கப் பொருளை இனிதுணர்வர்.

அவர்கள் விளக்கத்தில் 'ஜெருசலேம்' என்பது இதயத்தில் உறையும் பரிசுத்தான்மா (திரும்புங்கள் என்றது ஐம்புலன்களை) நமது அறிவு சாதனங்களாகிய ஐம்புலன்கள் பொது உலக மக்கள் போல வெளிஉலக இன்பங்களை விரும்பி வெளி உலகையே சேவிக்கும் நிலையிலுள்ளன. அவை உளமுகப்பட்டுக் கடவுளைச் சேவிப்பதற்குப் பதில், புறமுகப்பட்டு உலகியலைச் சேவித்தல், ஒரு இனம் சுயநாட்டைச் சேவிப்பதற்குப் பதில் உலக நாடுகளைச் சேவித்தலுக்கொப்பாகிறது. உடலுள்ளிருந்து இயங்கும் அறிவுக் கருவிகளும் மக்களும் இந்நோக்கில் ஒரு தன்மையலாகின்றன. இங்ஙனம் புறமுகப்பட்டலையும் அறிவுக் கருவிகளாகிய ஐம்புலன்களையும் மனத்தையும் குறித்தே தீர்க்க தரிசிகளாயுள்ளார்.

'திரும்புங்கள் எருசலேமுக்கு' அதாவது திரும்புங்கள் உங்கள் இதயத்திலுள்ள பரிசுத்த ஆன்மாவை நோக்கி. நீங்கள் பெற வேண்டும் உலகியல் இன்பங்களும் அங்கிருந்தே கிடைத்தல் தப்பாது என அறிவுறுத்தினார் யேசுவும். 'முதலில் ஈசுவர இராச்சியத்தை நாடு. நீ வேண்டும் மற்றதெல்லாம் அதிலிருக்கும் எனவும் கூறப்பட்டிருப்பதை அறிவீர். நீங்கள் உங்கள் தற்போதைய இயக்கத் தலைவர், 'தியோடோர் ஹெஸன்' இன் வேண்டுதலின்படி எருசலேம் நாட்டுக்குத் திரும்புதல் நன்று. ஆனால், புறஞ் செல்லும் உங்கள் கருவிகரணங்களை உள்முகப்படுத்தி உங்கள் இதயத்துப் பரிசுத்தான்மாவை அடைதல் அதனினும் நன்று. டொலர்க் கடவுள் ( Almighty doller ) நினைவைக் குறையுங்கள். உங்கள் இதயத்தை இடங் கொண்டிருக்கும் இறைவனையே கூடியபட்சம் நினைந்து போற்றுங்கள். அது செய்வீராயின் சர்வவல்லவராகிய கடவுள் லௌகிகஞ் சார்பான உங்கள் விருப்பங்களும் ஜெருசலேம் நாட்டில் வைத்தே உங்களுக்குக் கிடைக்க அருள்வார் என்பது உரை விபரம்.[52]

'நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீ வா . . .' என்ற தேவாரம், 'புலன்கள் திகைப்பிக்க யானுந் திகைத்திங்கோர் பொய் நெறிக்கே விலங்குகின்றேனை விடுதி கண்டாய்' என்ற திருவாசகம் ' 'பொன்னிலே மணிபோலும் மாயை தரும் மனமே நின் புரைகள் நீர்த்தாய் என்னிலோ யான் பிழைப்பன்"

எனுந் தாயுமானவர் பாடல் ஆதியனவெல்லாந் தருஞ் சைவ சித்தாந்தப் பொருளுணர்ச்சி, 'திரும்புங்கள் எருசலேமுக்கு' என்ற மேற்கோளில் வைத்துச் சமயோசிதமாகவும் வெகுலாகவ மாகவும் யூதர் மகாநாட்டில் விநியோகமாயிருக்கும் வனப்பை இங்கே காண்கின்றோம்.

திரு. இராமநாதன் இங்ஙனம் சைவசித்தாந்தம் அறியார் சமூகத்தில் அவர்கள் அறியக்கூடிய மேற்கோள்களில் தொட்டுச் சந்தர்ப்பாநுசாரமாகச் சைவசித்தாந்த நுண்ணுணர்வைப் புகுத்தாமற் புகுத்துகையில் இடம்பெற்றுவிட்ட சைவசித்தாந்த துணிபொருள் விளக்கங்கள் மற்றும் பல. முன்குறித்த கலாநிதி மிறன் ஷீவல்ப் அவர்களால் இராமநாதனது மற்றுமுள்ள பேருரைகளின் சாராம்சமாக் வெளியிடப்பெற்றிருக்கும் ஆன்ம கலாசாரம் என்ற நூலில் அவற்றைப் பின்வரும் அமைவிற் காணலாம்.

1. முதலாவது பிரசங்கம் :

மெய்யியற் கொள்கைகளில் உடன்பாடு, தெய்வ நம் பிக்கை இல்வழிக் கைகூடாது. ('எந்தைதாட்பால் வணங்கித் தலைநின்று கேட்க தக்கார்' என்ற திருப்பாசுரத் தேவாரத் தில் இப்பொருள் கொலுவிருத்தலுங் காணலாம்.)

2. இரண்டாவது பிரசங்கம் :

மெய்யியல் நூல்களில் சொல்லின் நேர்பொருளல்ல; தாற் பரியப் பொருளே வேண்டப்படும் ('சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்' என்ற சிவபுராண வரியிலும் இதுவேயுள்ளது.)

3. மூன்றாவது பிரசங்கம் :

சுயநல அன்பு குடும்பத்துக்குஞ் சரி, நாட்டுக்குஞ் சரி, ஒரு பழி. ('ஈசனுக்கன்பிலார் எவ்வுயிர்க்குமன்பிலார் அவர் தமக்குமன்பிலார்' என்ற சித்தாந்த மேற்கோளின் பிரதித் தொனி இதிலுள்ளது)

4. நான்காவது பிரசங்கம் : Key of Knowledge

i) ஆன்ம விழிப்புற்றோரே சாஸ்திரங் கேட்டல் தகும். (நிருவாணதீஷை பெற்றுச் சிவத்தியானஞ் செய் வோரே சித்தாந்த சாஸ்திரங் கேட்டற்குரியர் என்ற நாவலர் வாக்கும் அது.)



ii) கடவுள் ஆன்மாவினால் நேர்முகமாக அன்றி மன வுணர்வினால் அறியப்படார். ('உணர்வினால் உணர்தற் கெட்டா ஒருவரை உணர்த்த வேண்டி' — என்ற இளையான்குடிமாற நாயனார் புராண வாக்கிலும் இஃதுண்டு)

iii) மலமாசு தீர்ந்தாலன்றி ஆன்மா கடவுளை அறியாது — ('பொய்கண்டார் காணாப் புனிதமெனும் மெய்' என்ற தாயுமானவர் வாக்குங் காண்க)

iv) ஆன்மாவால் ஆன்மாவை அறி. ('தன்னாலே தனை யறிந்தால் தன்னையுந்தானே காணும்' என்ற சிவ ஞானசித்தியார்க் கருத்தும் அது.)

v) கடவுள் பிரபஞ்ச முகத்தில் எங்கும் காணப்படார். (ஒருத்தனே உன்னை உலகெலாந்தேடி ஒலமிட்டலறி யும் காணேன் — என்ற திருவாசகஞ் சொல்வதுமது.)

5. ஐந்தாவது பிரசங்கம் : விதியும் தீர்க்கதரிசிகளும்

i) வேதவிதிவழுவினோர் தண்டனைக்குரியர். ('ஏரிட்ட நின்சுருதி மொழி தப்பின் நமனைவிட்டிடருறவுறுக்கி' என்ற தாயுமானவர் பாடற் பொருள் இங்கே கருதப் படும்)

ii) ஆன்மாவுக்கு மறுபிறப்புண்டு. ('உள்ளதே தோற்ற உயிரணையு மவ்வுடலின்' என்ற சிவஞானபோத வெண்பா காண்க)

6. ஆறாவது பிரசங்கம் : கீதங்களின் போதனைகள்

i) 'தினந்தினந் தெய்வத் தியானம் வேண்டும்' ("நின்று மிருந்துங் கிடந்தும் நடந்தும் நினை, என்றுஞ் சிவன்றாளினை' என்கிறது சைவசமயநெறி)

ii) விழிப்புணர்வுற்ற ஆன்மாவையும் அதன் முன்னைய மலதோஷங்கள் தாக்கிக் கெடுக்கப் பகீரதப்பிரயத்தனங் கள் பண்ணும். ('மன்றவனடியார்க்கு என்றும் வழிப்பகைகளிறே (ஆணவமலவாசனை) அன்றோ' என்ற பெரிய புராணச் செய்யுளும் இதைப் பேசும்)

7. ஏழாவது பிரசங்கம் :

i) புத்தி ஆன்மாவிற் பிரதிஷ்டிக்கப்படற்பாலது.

ii) அழுகையின் அர்த்தம் கடவுட்பேறே ('ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே' – என்ற திருவாசகமும் இப்பொருளினதே)

குறித்த பிரசங்கங்கள் ஏழினுள்ளும் நடுநாயகமாகத் திகழும் 'ஞானத்திறவு' – Key of knowledge. எல்லாச் சமயங்களுக்கும் இன்றியமையாத ஒன்றாய் அமைந்து சைவசித்தாந்த ஞானத்தின் அகண்ட வியாபகப் பண்புக்கு அத்தாட்சியாயிருத்தல் குறிப்பிடத்தகும். அப்பிரசங்கம் பெயராற் சைவசித்தாந்தமெனத் தன்னைத் தோற்றிக் கொள்ளாமை அதுசார் மகிமையாகும்.[53]

சேர். பொன். இராமநாதன் அவர்கள் கிறீநாகரில் ஐந்து வாரகாலம் தொடர்ந்து இயற்றிய பேருரைகளின் நிறைவில், அவற்றை ஒழுங்கு செய்து நடத்திய Monsal Vat School for the Comperative Study of Religion என்ற ஸ்தாபனத்தார் அளித்த பாராட்டுரையின் ஒரு பகுதி வருமாறு:

While bringing to us a deep faith in the religion of the east and while in no wise renouncing his allegiance there to, he has shown much inside in to the spirit and genius of christianity, that his interpretations have been as stimulating as they have been suggestive and illuminating.

அவர் கிறீநாகரிற் பிரியாவிடை பெற்றுக் கொண்டதன் சார்பாக Daily Republican என்ற பத்திரிகை வெளியிட்ட செய்தியின் ஒரு பகுதி வருமாறு:

Member of the Hindu wealty Family for many years the representative of his race in the Legislative council of Ceylon and now holding the responsive postion of solicitor general of the Grown, with the knowldge a little short of Encyclopedic a Command of the English language at once the admiration and the despair of all who hear it and strong sence of humour withal. Mr. Ramanathan at the same time posseses vast stores of spiritual knowledge of which the average Occidental is as ignorant as a babe[54] unborn.

திரு. இராமநாதனின் சைவ சித்தாந்த அறிவியல் மேதை விளக்குமுறும் அவர் நூற் பிரசுரங்களிற் பகவத் கீதைக்குச் சித்தாந்த பரமாக அவரியற்றிய வியாக்கியானத்தோடு கூடிய



பிரசுரம் முதன்மை பெறும். ஏகான்மவாதி, மாயாவாதி, விசிஷ்டாத்துவிதவாதி, துவிதவாதிகள் தத்தம் பிரஸ்தானத் திரயங்களில் ஒன்றாகக்கொண்டு தத்தம் வியாக்கியானங்களைப் பல்வேறு விதத்திற் பெருக்கிப் பேணிய அந்நூலுக்குத் தமது தனித்துவமான விவேகத்தினால் அவர் இயற்றிய சைவ சித்தாந்த பரமான ஒரே ஒரு உரையாக நிலவுகின்றது அது. அவர் உரையோடு வெளிவந்த ஏனையவற்றில் ஒன்று ஆத்திசூடி, மற்றது திருக்குறட் பாயிரம். இரண்டும் சைவசித்தாந்த விளக்கில் விளங்கும் உரைகளேயாம்.

## சைவப் பெரியார் சிவபாதசுந்தரம்

நம்மவரிடையிற் பிரசித்தமாக அறியப்பட்ட ஒரு சைவப் பெரியார் சிவபாதசுந்தரம் அவர்கள். கல்விச் சேவை, சைவ பரிபாலனம், சைவ சித்தாந்த போதனை ஆகிய துறைகளில் நாவலர் பெருமான் விட்ட இடத்திலிருந்து தொட்டுத் தொடர்ந்த ஒருவர் இவராவர். நாவலர் பெருமானையும் இவரையும் இணைத்து நோக்கி, சைவத்தின் புண்ணியக் கண்கள் இரண்டு என்றெழுந்த புகழ்மையும் ஒன்றுளதாகும்.(54a) கணிதம், விஞ்ஞானம், தருக்கம், மனோதத்துவம், சமஸ்கிருதம், தமிழ், ஆங்கிலம் என்பவற்றில் விசேட தகைமை பெற்று ஆங்கிலக் கல்லூரி ஆசிரியராகவும் அதிபராகவும் புகழ்பெற்ற இவர்கள் தருக்க வலுவும், மெய்யியல் விவேகமும், கற்போரை ஆக்கும் திறமையும் வாய்ந்த சைவ சித்தாந்த நூல்கள் பலவற்றைச் செந்தமிழ், ஆங்கிலம் என்னும் இருமொழிகளிலும் எழுதிப் பிரசுரித்துள்ளார்கள். தமிழ் மொழியில் இவர் எழுதிய நூல்களில் பிரசித்தமானது திருவருட்பயன் உரை விளக்கம். அவரது உளவியல் அறிவொளியில் மாணவரின் உளப்பாங்கறிந்து அவர்கள் விரும்பி ஏற்குமாறு எழுதப்பட்டது இந்நூல். இந்நூற்றாண்டின் முன் அரைப்பகுதியில் கல்லூரி மாணவர் சைவ சித்தாந்தம் கற்றற்குதவும் ஒரேயொரு நூலாய் அமைந்த மகிமைக்குரியது அது. அன்றைய அரசாங்கத்தின் கல்விப் பகுதியில் தமக்கிருந்த செல்வாக்கைப் பயன்படுத்திச் சைவத் தமிழ்ப் பாடசாலை தோறும் சைவசமயக் கல்வி நிரந்தரமாக இடம்பெறவும் கல்லூரி உயர் வகுப்புப் பரீட்சைக்குச் சைவ சமயம் ஒரு பாடமாக இடம் பெறவும் உதவிய அவர் சேவைப்பலன் இன்று இலங்கைப் பல்கலைக்கழகங்களில் இந்துநாகரிகம், இந்து சமயம், சைவ மெய்யியல் என்ற அறிவுத்துறைகள் தோன்றி விளங்கும் அளவுக்குப் பிரவிருத்தியுற்றிருத்தல் கண்கூடு. பாடசாலை மாணவர்க்கென அவர் எழுதி வெளியிட்ட சைவபோதம் 1-ம் 2-ம் புத்தகங்களும் மாணவர் சமயக் கல்விக்குப் பெருமளவில் உதவின.

அவர் ஆங்கிலத்தில் எழுதிப் பிரசுரித்த நூல்களில் The Glories of Saivaism, Saiva School of Hinduism, An Outline of Sivagnanabodham with a Rejoinder, to a Christian critic என்ற சைவசித்தாந்த நூல்கள் பிரசித்தமானவை. சைவ நடைமுறை ஒழுக்கங்களைக் காரணகாரிய இயைபுகாட்டிச் சுருக்கமும் தெளிவுமாக விளக்குவது முதல் நூல். The book can be read by young students with advantage. it obviates the necessities to read so many hard books in tamil which realy one has the patience and training to comprehend, என, பிரசித்தி பெற்ற உளநூல் விற்பன்னரான கலாநிதி கு. சிவப்பிரகாசம் வழங்கியுள்ள அத்தாட்சி உரையே இதன் மகிமையை உணர்த்தும்.[55] இரண்டாது நூல் பரம்பரைச் சமயம், உண்மைச் சமயப்பண்பு, சைவப் பண்பாட்டின் மேன்மைகள், கடவுள், ஆணவம், மாயை, கர்மநியதி முதலான சைவசித்தாந்தப் பொருட் கூறுகளைத் தனித்துவமான பாணியில் விளக்குவது. பிரித்தானியா, இந்தியா, அமெரிக்கா, மலேசியா முதலியவற்றிலுள்ள கல்விமான்களின் பாராட்டுகளைப் பெற்றுள்ளது, காசி இந்துப் பல்கலைக்கழகத்தின் மெய்யியல்துறைக்குப் பாடபுத்தமாக ஏற்கப்பட்டுள்ளது. கார்டிப் பல்கலைக்கழகக் கல் லூ ரிப் பேராசிரியராகிய மக்கன்சி (J. S. Mackenzie, D . L. L. D.) என்ற அறிஞரின் முன்னுரையோடு கூடியது. இலண்டன் ஜோர்ஜ் அலன் அன்வின் ஸ்தாபனப் பிரசுரமாக வெளிவந்துள்ளது.[56]

சைவப் பெரியாரின் ஆங்கில நூல்களிற் கண்டனநூல் இலக்கணத்தாற் சிறந்தது மூன்றாவது நூல். செல்வி வயலற் பரஞ்சோதியின் சைவசித்தாந்தம் என்ற ஆங்கில நூலின் கருத்து முரண்பாடுகளைத் தெரித்து மறுக்கும் எதிரேற்று வகையினதான கண்டனநூல் இதுவாகும். 18ஆம் நூற்றாண்டில் தலையெடுத்து இந்நூற்றாண்டின் முதற் காற்பகுதிவரை யாழ் அறிஞரிடையில் பிரபல்யமாயிருந்து பின் சீணித்துப்போன கண்டன மரபுக்குப் புனர்வாழ்வளித்த விசேட முடையது. தருமபுர ஆதீனத்து வைத்தீஸ்வரன் கோயில் தம்பிரானாக விளங்கிய சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளின் வேண்டுதலைக் கௌரவிப்பதற்காகச் சைவப் பெரியாரால் எழுதப் பட்டது.[57] சிவஞானபோத சூத்திரங்கள் 12 க்கும் பொழிப்புரையும் விளக்கமும் தந்து ஆங்காங்கு மேற்குறித்த அம்மையார் கிளப்பிய ஆட்சேபங்களைத் திட்பநுட்பமாக மறுத்துச் சைவசித்தாந்தக் கோட்பாடுகளின் உண்மை நிலையைத் தெளிவாக்குவது இந்நூல். சைவப் பெரியாரின் தருக்கத் திறமை



விசேடத்தை இதிலுள்ள அவர் மறுப்புக்களில் தாராளமாகத் தரிசிக்கலாம். உதாரணத்திற்காகச் சில வருமாறு:

சிவஞானபோதம் 1-ம் சூத்திரத்தில் 1 ஆவது மேற்கோள், இவ்வுலகு முத்தொழில் உடையது என்பது, அதற்குக் கூறப்பட்ட ஏது, தோற்றமும், ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின் என்பது. அதாவது காணப்படும் ஏதும் ஒரு பொருளின் விடயத்தில், முன் அதற்கொரு தோற்றமும் பின் அதற்கொரு அழிவும் உண்மை அதன் நிலைப்பில் வைத்தே அனுமானிக்கப் படும் என்பது. பூமியில் காணப்படும் செடி ஒன்றுக்கு, முன் ஒரு தோற்றமும் பின் ஒரு அழிவும் இருத்தல் போல இது அமையும். இதே பொருள் நன்கு புலப்பட இதனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த Cordan Mathew, M. A. என்ற ஆங்கிலேயர் கூட உண்மை புலப்படுமாறு besides maintenance the production and distruction are also seen ) எனச் செப்பமாக மொழி பெயர்த்துள்ளார். இருந்தும், இந்த அம்மையார் இதை This world however has origin, therefore it is real என மொழி பெயர்த்து விட்டு உலகின் யதார்த்தத் தன்மை இவ்வுலகம் தோற்றமுடைத்து என்ற கோட்பாட்டிலிருந்து அனுமானிக்கப் படுகின்றது என்று விளக்கமும் கொடுத்துள்ளார். இதற்குச் சைவப்பெரியார் விடுத்த மறுப்பு What Maikandar says is the reverse, he assumes that the world is real and infers that it has orgin.

மேற்போந்த கருத்தின் தொடர்பாகச் சிவஞானபோதத்தில் வரும் விளக்கம் ஒன்று பின்வருமாறு காண்கிறது. குறிக்கப்பட்டஓரினத்தனவான செடிகள் ஒரு பருவத்தில் ஒருமித்துத் தோன்றுகின்றன. மற்றொரு பருவத்தில் ஒருங்கே அழிகின்றன. அவ்வாறே இப்பிரபஞ்சமும் ஒரு காலத்தில் ஒருங்கே தோன்றி மற்றொரு காலத்தில் ஒருங்கே அழியும் என்பது அவ்விளக்கம். இதைச் சுட்டிக் குறிப்பிடும் அம்மையார், This is a fallacy of composition என்கிறார். இதற்குச் சைவப்பெரியாரின் மறுப்பு, This is really a comparision which as different from the fallacy of composition as a horse is from a goose என்பது, இத்தொடர்பில் fallacy என்பதற்கு அவர்கள் காட்டும் சரியான உதாரணம்,

3 and 2 are odd and even
3 and 2 are 5
ஃ 5 is odd and even

கடவுளுக்கும் பிரபஞ்சத்திற்கும் இடையிலான கர்த்தாவும் காரியமும் ஆம் இயைபைத் தெரிவித்தற்குக் குயவனையும் மட்பாண்டத்தையும் உவமை கூறுவது சைவசித்தாந்த விளக்க மரபு. சிவஞானபோதத்திற்கு 400 ஆண்டுகள் முற்பட்ட மோட்ச காரிகை அதற்குப் பின்னான ஞானாமிர்தம் என்பவற்றிலும் இந்த உவமையே கூறப்பட்டுள்ளது. இவ்வுவமை கொள்ளப்படுவதன் ஒரே நோக்கம் காரியம் என்றுள்ள ஒன்றுக்குக் கருத்தா என்றொருவர் இருத்தலை நிரூபிக்குமளவே. அஃதிருக்க இவ்வம்மையார் இத்தொடர்பில் கூறுவது:-

சித்தாந்தி உலகுக்குக் கடவுள் கருத்தா ஆவதற்கு உவமை காட்டுதற்கு மட்பாண்டத்துக்குக் குயவன் கருத்தா ஆவதைக் ( உவமையாகக் ) காட்டி வாதிப்பன். அங்ஙனம் குறிக்கப்பட்ட பொருள் ஒன்றுக்குச் சம்பந்தப்பட்ட ஆக்கியோன் ஒருவன் உளன். ஆதலால் பிரபஞ்சம் முழுவதும் கர்த்தா ஒருவனைக் கொண்டதாய் இருந்தே ஆகவேண்டும் எனல் To commit the fallacy of composition என ஆட்சேபித்துள்ளார். இதற்குச் சைவப் பெரியார் செய்யும் மறுப்பு, The critic calls this an analogy and yet wants make out that this is a fallacy of composition என்றிருக்கிறது. தொடர்ந்து இதன் சார்பில் சைவப் பெரியார் மேலும் கூறுவது:-

மட்பாண்டம் – குயவன் உவமை கையாளப்படுவது காரியமொன்றுக்குக் கர்த்தா ஒருவன் வேண்டும் என்னும் மாத்திரைக்கே. இந்த உவமை சம்பந்தப்பட்ட வேறு கருத்தம்சங்களுக்குத் தொடர்புபடுத்தற் குரியதாகாது என்பதை அம்மையார் முதலில் தெரிந்துகொள்ளக் கடவர். பெண் ஒருத்தியின் கண், மீன் போல்வதென்றால் வடிவ மாத்திரைக்கே அவ்வுவமை கொள்வதன்றி, மீன்போலக் கண்ணும் முட்டையில் இருந்து பிறப்பதென்றோ, மீன் மீனைத் தின்று வளர்வது போல், கண்ணும் கண்ணைத் தின்று வளர்வதென்றோ கொள்ளும் பாங்கில்லை.

இரண்டாவதாக, அம்மையார் அறியவேண்டுவது:- கடவுள், விற்பனை நோக்கில் உலகைப் படைக்கவில்லை. ஆதலால் குடத்தை யார் வாங்கப் போகிறார் எனக் குயவன் அறிவானா? குடம் என்ன தேவைக்கு உதவப்போகிறது என அவன் அறிவானா? என அவர் இத்தொடர்பில் ஆசங்கை கிளப்புதற்கு அருகதை இன்றாம். மேலும், குடம் விலை போகாது தன்வசத்தில் இருக்குமளவுமே குயவன் அதைத் தன் கட்டுப்பாட்டிற் கொண்டிருப்பான். பிரபஞ்சத்தை வாங்குவாரின்மையின் கடவுள் அதை என்றைக்குமே தன் கட்டுப்பாட்டில் வைத்திருப்பார். ஆதலால் இந்த உவமை ஆராய்ச்சி மேலும் தொடரின் கடவுளின் அறிவும் ஆற்றலும் மட்டுப்படுத்தப்பட்டன என்றல்லாது அவர் எல்லாம் அறிபவர், எல்லாம் வல்லவர் என்னும் முடிவையுந் தருவதாகும் என்பது.



இவ்வாறே சிவஞானபோத சூத்திரங்கள் 12 இல், 1 – ம் சூத்திரத்தின் சார்பில் எட்டும் 2 – ம் சூத்திரத்தின் சார்பில் பதின்மூன்றும், 7 – ம் சூத்திரத்தின் சார்பில் ஆறும் ஆக 38 ஆட்சேபங்கள் இவ்வம்மையாராற் கிளப்பப்பட்டுச் சைவப் பெரியாரால் திறம்படக் கண்டிக்கப்பட்டுள்ளமை காணலாம்.[58] சைவ சித்தாந்த உண்மை விளக்கத்தைப் பேணுதலில் சைவப் பெரியார் புரிந்த இச்சேவை அவ் விளக்க விருத்தியில் பதிந்துள்ள யாழ் அறிவியல் மேதையின் சுவடுகளில் அதிகவர்ச்சிச் சிறப்புடையதாம். எடுத்த கருத்தை ஒரு எழுத்தசை தானும் கூடவோ குறையவோ விடாமல் நிறுத்தளந்து செட்டாகச் சிக்கனபரமாக உரைக்கும் அவரது உரை மாண்பும் அன்னதே. மேலும், இவ்விஷயத்திற் சம்பந்தப்பட்ட இருவரில் அம்மையார் சி த் தா ந் த சாஸ்திரங்களை உரியமுறையில் கற்றுத் தெளியாது போக்குவரவிற் கண்டது கேட்டது மட்டுங் கொண்டு ஆய்வியலிற் புக்குப் பிழைபடுவார்க்கு உதாரணமாகவும், பிழைகளை, விசேடமாகச் சைவசித்தாந்தப் பொருட்பிழைகளை எங்கு எவர் சார்பிற் காண நேரினும், தாட்சண்யமின்றிக் கடிந்தொதுக்கி உண்மை விளக்கம் நிலை பெறவைத்தல் சைவ அறிஞர்க்குத் தர்மக் கடமை என்பதற்குச் சைவப் பெரியார் உதாரணமாகவும் திகழ்தல் இங்கு குறித்துணரப்படும். ' ஓ " கண்டனமோ. ஆ! அது கூடாது என்ற போக்குத் தவறானது. அது சரியெனப்படுமேல் நெல்வயலிற் களை பிடுங்குவதும் பிழையெனவே படும். களை பிடுங்குவது பயிர்விருத்தி நலனுக்காக; கண்டனஞ் செய்வது கருத்துத் தூய்மை விருத்தி நலனுக்காக. வளரும் அறிவுத் துறைக்கு அது அவசியமானது. அது ' வளர்வதன் பாத்தியுள் நீர் சொரிந்தற்று".

## விஞ்ஞான மாணவன் அ. விசுவநாதபிள்ளை, B. Sc.

சைவ சாஸ்திர தோத்திரங்கள் பிரதிபலிக்கும் சிவபரத்துவம், வேத சாஸ்திரங்களிலும் உண்மையை நிருபித்தற்குச் செந்திநாதையர் மேற்கொண்ட அதி கிருச்சிர முயற்சி[59] (herculian task) க்குச் சமானமாக, அவை உபநிடதங்களில் விசேடமாக உண்மையை, விரிவாக வெளிக்கொணரும் அதிகிருச்சிர முயற்சியில் ஈடுபட்டுப் பலன் கண்டவர், விஞ்ஞான மாணவனெனத் தன்னைப் புனைபெயரில் தோற்றிவந்த திரு. விசுவநாதபிள்ளை என்பவர். அவர் ஆக்கங்கள் சிவஞானபோதம், சிவஞானசித்தியார், உபநிடதங்கள், திருமந்திரம் ஆதியன பற்றி ஆங்கில மொழி மூலம் இந்து சாதனத்தில் தொடர் கட்டுரைகளாக வெளிவந்து பின்னால் நூலுருவானவை. The Elements of Saiva Siddhantha என்னும் அவர் நூல் சிவஞானசித்தியார்ப் பொருளைப் பிரதிபலிப்பதாயிருப்பது. உபநிடத விளக்கங்கள், வேதாந்த மூலசாரம் என்ற பெயரில் ஆங்கிலத்தில் வெளிவரலாயின. உபநிடதங்கள் கூறும் மெய்யியலுண்மைகள் சைவசித்தாந்த மெய்யியலுண்மைகளோடு அச்சொட்டாகப் பொருந்தக் கூடியவை என்பதை இவை மிகத் துலாம்பரமாகப் பிரதிபலிக்கும் பான்மையன. 1950இல் நூலாக வெளிவந்த இதற்கு முன்னுரையளித்த சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியார், இந்நூற் பெயர் The identity of Vedantha & Saiva Sidthantha[60] என இருந்ததாலோ ஆசித்துள்ளார். கைவல்ய உபநிடதம் முதல் சுவேதாஸ்வர உபநிடதம் ஈறாக உள்ள 24 உபநிடதங்களின் விளக்கம் இதில் இடம்பெறுகிறது. இவரது நூல் முயற்சியின் ¾ பாகமும் இதற்கே செலவாயிற்றென்பர். அவ்வளவுக்கு இதில் அவர் தம்மை அர்ப்பணித்துக் கொண்டதன் பின்னணி பின்வருமாற்றால் தெரிந்து கொள்ளப்படும்.

பிரதானமான இந்திய தத்துவக் கோட்பாடுகளில் சைவசித்தாந்தம் தவிர்ந்தவை ஏகான்மவாதம், மாயாவாதங்களை உள்ளடக்கிய கேவலாத்துவிதம், விசிஷ்டாத்துவிதம், துவைதம் என்பவற்றில் அடங்கும். இம் முக்கூற்றினருக்கும் பொதுவான மெய்யியல் நூல் பிரமசூத்திரம் ஒன்றே. அதனால் ஒரே சாஸ்திரமே அவரவர் கோட்பாட்டுக்கு இசைவாக அவரவரால் விரித்து விளக்கப்பட வேண்டும் நிலை உளதாயிற்று. சம்பந்தப்பட்ட முத்திறத்தாரும் அது புரியும் அதே வேளை பிரமசூத்திரத்துக்கு விளைநிலமாயிருந்த உபநிடதங்களும் தத்தம் கருத்துப் போக்குக்கு ஒத்திசைவாய் இருக்குமாற்றைக் காட்ட



வேண்டிய கடப்பாடும் உடையராயினர். உபநிடதம் என்பது கொள்கைச் சார்பு பற்றி எழுந்த ஓர் நூலன்று. பதி, பசு, பாச உண்மைகள் தம்மியல்பில் இருந்தவாற்றை ஞானிகள் காட்சியில் இருந்து வந்தபடி தெரிவிப்பதே அதன் யதார்த்த நிலை. அத்தகையதைக் கொள்கைச் சார்பு வசப்படுத்தி உரைக்கப் புகுகையில் உரைப்பவர் பொருள் நோக்கிற் கேற்ப அதில் வரும் பதங்களின் பொருளைத் திரித்துரைத்தல் போன்ற செயற்பாடுகள் தவிர்க்க முடியாதவனாய் விடுதல் இயல்பே. அதிலும், பிரமசூத்திரத்திற்குச் சைவசித்தாந்தம் சார்ந்த சிவாத்துவித பரமாக எழுந்த நீலகண்ட சிவாசாரியாரின் உரை ஏலவே பிரசித்தமானபின் தாம் உரை செய்யும் கேவலாத்துவித, விசிஷ்டாத்துவைத, துவைத குரவர்களுக்கு அவற்றின் இன்றியமையாமை சொல்லாமே அமையும். இத் தொடர்பில் அவர்கள் நோக்கு இரட்டைப் பொறுப்பினதாயிற்று. உபநிடதப் பொருண்மை, சைவசித்தாந்தப் பொருண்மைக்குச் சார்பாயில்லாமை தெரிவிக்கப்படவேண்டியிருந்தது ஒரு நோக்கம். அது முத்திறத்தார்க்கும் பொது. மற்றது யாதெனில், அவரில் ஒவ்வொருவரும் தனித்தனி மற்ற இருவர் கோட்பாடுகளுக்கு உபநிடதங்களில் ஆதாரமின்மையை உறுதிப்படுத்துவது. இச் சூழ்நிலையால் உபநிடதங்கள் நலிவுறாது தம் சுயநிலையில் இருத்தல் கஷ்டத்தின் மேல் கஷ்டம் என்ற நிலை உண்டாயிற்று. நல்ல வேளையாக இவர்களுக்கிருந்தது போல் ஒரு உள்நோக்கம் நீலகண்ட சிவாசாரியாருக்கு இருந்ததில்லை. அதனால் அவர் முன்னெச்சரிக்கையாக உபநிடதங்களுக்குத் தமது கோட்பாட்டுச் சார்பான உரை விளக்கம் செய்திட வேண்டி நேர்ந்ததில்லை.

உபநிடதங்களில் மட்டுமல்ல, அவை சார்ந்த புராண இதிகாசங்களில் மட்டுமல்ல, பிரமசூத்திரத்திற் கூட அவர்களால் திரிபுகள் செய்யப்பட்டிருந்தவாற்றை ஏலவே செந்திநாதையர் பற்றிய விளக்கத்திற் கண்டுள்ளோம்.

இவ்வாறு அவரவர் கோட்பாட்டுச் சார்பாயெழுந்த உபநிடத விளக்கங்களில் ஏகான்மவாத, மாயாவாதிகளின் கேவலாத்வைத விளக்கம் எப்படியோ ஒருவிதமாகப் பிரசித்தி பெற்றுவிட்டது. வேத சாஸ்திர ஆய்வில் இறங்கிய மாக்ஸ் முல்லர் போல்வார் மூலம் அவ்விளக்கங்கள் மேல் நாட்டாவரான கீழைத்தேசக் கல்வியாளர் (Orientalist) களுக்கெட்டியிருத்தல் இயல்பே. அத்துடன் இராமகிருஷ்ணர் பெயரில் துரித விருத்தியுற்ற மடங்களும் அதே விளக்கங்களை ஆங்கில மயப்படுத்தி அகிலமெங்கும் பெருமளவிற் பரப்பி வந்தன. இதன் விளைவாக, சைவசித்தாந்

தத்துக்குச் சிவாகமம் போல் வேதமும் முதல் நூல் என்ற கொள்கை நிலையிற் பேதலிப்பு ஏற்படும் போக்கு உருவாயிற்று. சைவசித்தாந்தம் உள்பொருள் மூன்று என்று சொல்ல அம்மொழி பெயர்ப்புகள் ஒன்றே எனலாயின. சைவ சித்தாந்தங் காட்டுந் திருவருட் சத்தியினுண்மை மாயையின் உண்மைகளை மறைத்து அவற்றுள் முன்னையதைப் பிரகிருதி என்றும் பின்னையதை அநிர்வசனீயம் என்றும் திரித்துக் கூறின. சைவ சித்தாந்தம் மூல மலம் என்ற ஆணவத்தை, அஞ்ஞானம் என அவை மழுப்பின. இவை போல்வனவே அப்பேதலிப்புக்குக் காரணமாம்.

இக்கட்டத்தில், உபநிடதங்களின் உண்மை நிலை அவ்வுரைகள் காட்டும் அளவிலில்லை என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டவேண்டியது சைவசித்தாந்த விளக்க முடையார் தலைக்கடனாயிற்று. இந்தச் சார்பொன்றே திரு. விசுவநாதன் உபநிடத விளக்கப்பணியில் முனைப்புற்றதற்குக் காரணம் என்பது அவர் உரையிடை வைத்த குறிப்புக்களினால் இனிது விளங்கும். முன்னைய கேவலாத்துவித குரவர் முதலியோர் செயற்பாட்டுக்குச் சமாந்தரமாக இவரும் தம் பிரீதிக்குரிய சைவசித்தாந்தச் சார்பாக வலிந்து உபநிடத விளக்கஞ் செய்தாரென்பதற்கில்லை. அது, இவர் அநாவசியமாகச் சொற்திரிபு, பொருள் திரிபுகளை மேற்கொண்டிராமையும், ஞானசாஸ்திர நூல்களுக்கு நேரடியான சொற்பொருளை விட, சொற்பொருளை விட்டு நீங்காதிருக்குந் தாற்பரியப் பொருளை விதந்தெடுத்துக் காட்டும் முறையில் இங்கு முன்கண்ட சேர். பொன். இராமநாதனின் முன்மாதிரியைப் பின்பற்றுதலும் ஆகிய இவருரையின் விசேட பண்புகளால் விளக்கமுறும். இவ்வெல்லா இயல்பும், மேற்காட்டப்படும் இவரது விளக்கப்பகுதிகள் சிலவற்றால் இனிது பெறப்படும். அவை வருமாறு:-

கைவல்ய உபநிஷத் என்பது சைவசித்தாந்த விளக்கத்திற்கு எளிதில் உதவும் உபநிஷத்களில் முக்கியமானது. அதனையே, தமது விளக்கப்பணியில் முதலாவதாகத் தேர்ந்தெடுந்துக் கொண்ட திரு. விசுவநாதன் அதன் பெயரிலேயே வைத்துக் காட்டும் விளக்கம் வருமாறு:-

கைவல்யம் என்ற பெயரே முப்பொருளுண்மையை நேரில் அறிவிக்கும், எங்ஙனமெனில், கைவல்யம் என்னும் பதம் தனித்திருக்குந்தன்மை எனும் பொருளில் உள்ளது. தனித்திருக்குந் தன்மையெனில், பிறிதொன்றன் சார்பிலிருந்து பிரிந்திருக்குந் தன்மையாகவேயிருக்கும். அந்நோக்கில் பிரிதற்கிடமாக இருந்தது



எது? என்ற விசாரணையில் அது (சைவசித்தாந்த விளக்கத்தில்) பாசம் என்ற விடை கிடைக்கும். இனி பிரிந்திருத்தல் என்கையிற் பிரிதலைச் செய்யும் ஒன்று யாது என்ற ஆசங்கை எழும். அதற்காம் ஆய்வில் அது உயிர் என்பது பெறப்படும்.

மேல், உபநிஷதம் என்ற சொற்பொருள் அணுகியிருத்தல் அல்லது அணுகிச் செல்லுதல் என்றாகும். அதில் அணுகி என்றதில் எதை என்றெழும் ஆசங்கையும், செல்லுதல் என்கையில் எதை நோக்கி என்றெழும் ஆசங்கையும், தீர்ந்த விசாரணையில் கடவுளை, கடவுளிடம் என்ற விடைகளைத் தருதல் தவறாதாகும். ஆதலின், கைவல்ய உபநிடதம் என்ற இப்பெயரே முப்பொருளின் இருப்பை உணரநிற்றல் வெளிப்படை. மேலும், இவ்வாறே வேதம் யோகம் சிவோஹம் என்பனவும் விடுத்து விசாரிக்கையில் அவற்றின் இருப்பைக் காட்டுதல் அறியப்படும்.

திரு. விஸ்வநாதன் தாம் மேற்கொள்ளப்போகும் உபநிடத விளக்கங்களுக்கு இறங்குதுறையாக இவ்விபரத்தைக் காட்டி மேற்செல்கிறார் [61]

சுவேதாஸ்வதரம் என்பது அனைவோர் நோக்கிலும் விசேஷமானதெனப்பட்ட ஒரு உபநிடதம். அதன் முதலாம் அத்தியாயத்து இரண்டாம் மந்திரம் சைவசித்தாந்திகளல்லாதாரால் ஒருதலைப்பட்சமாக உரைவிளக்கஞ் செய்யப்பட்டிருப்பதையிட்டு இவர் விசாரிப்பதை இனிக் காணலாம். கால: ஸ்வபாவோ நியதி: யத்திருச்சா, பூதானி யோனி; புருஷ; இதி சிந்த்யா சம்யோக ஏதேஷாம் நது ஆத்ம பாவாத் ஆத்மாப் யனீச; சுகதுக்க ஹேதோ: என்பது குறித்த மந்திரம். இவ்வத்தியாயத்து முதலாவது மந்திரத்தில், கிம் காரணம் ப்ரஹ்ம- பிரபஞ்ச காரணம் பிரமமா என்றெழுந்த வினாவுக்கு விடை தரும் பாங்கில் இதன் பொருள் அமைகிறது. பிரபஞ்ச அமைவிற் சம்பந்தப்படுந் தத்துவங்கள் ஏழைப் பெயர்சுட்டி அவை அசேதனங்களாதலால் தத்தமில் தனித்தேனும் ஏழும் ஒருங்கு சேர்ந்தேனும் பிரபஞ்சத்துக்கு நிமித்த காரணம் ஆகா. உயிர் தானே அக்காரணமாமோவெனில், அதுவும் சுகதுக்கங்கட்குட்படும் பரதந்திரன் ஆதலால் அதற்கும் அக்காரணத்தன்மை ஒவ்வாதாகும் எனக் கூறி, இவற்றில் ஒன்றும் ஆகாததும் இவைகளைப்போல் அசேதனமாதல், பரதந்திரப்படுதல் ஆகிய தோஷங்கள் தனக்கில்லாததுமான பிரமமே பிரபஞ்சத்துக்கு நிமித்த காரணம் என உணர்த்துதல் சந்தர்ப்பாநுசாரமான இதன் நோக்கமாகும் என்ற உண்மையை உட்கொண்டிருப்பது இவ்விரண்டாம் மந்திரம்.

இங்ஙனம் பிரமத்தாலாக்கப்படும் பிரபஞ்சத் தோற்றத்திற் சமபந்தப்படுந தத்துவகாரணங்கள் பிரகிருதிமாயை, அசுத்த மாயை, சுத்தமாயை என மூன்றென்பதும் அவற்றுள் அசுத்த மாயைத் தத்துவங்கள், காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்ற ஏழென்பதும் சிவாகமங்கள் சைவசித்தாந்த சாஸ்திரங்கள் அனைத்துக்கும் ஒப்ப அமைந்த ஒன்று. அந்த ஏழில் காலம், நியதி, யோனி, புருடன், யத்திருச்சா என்ற ஐந்தும் நேர்பொருளிலும் ஸ்வபாவ: யோனி என்ற இரண்டும் குறித்துணர நிற்கும் பொருளிலும் அசுத்தமாயா, தத்துவங்கள் ஏழையுங் குறிப்பனவாயுள்ளன. அவற்றில், ஸ்வபாவம் – கலை, பூதானி – வித்தை, யத்திருச்சா – அராகம் – (இச்சை) என அமையும்.

கலை, வித்தை, அராகம் எனும் இம்மூன்றும், கேவல நிலையில் ஆணவத்தினால் மறைக்கப்படும் உயிரின் இயல்பான இச்சாஞானக் கிரியைகளை விளக்கும் பொருட்டு அசுத்த மாயையிலிருந்து தோற்றுவிக்கப்படும் என்பது சைவசித்தாந்த விளக்கமாம். இவை மூன்றினுள்ளும் முதலாவதும் முழுமைத தன்மை வாய்ந்ததும் ஆன ஒன்று கலை என்ற தத்துவம்; அதன் ஏகதேசத்திலிருந்து வித்தை தோன்றும்; வித்தையின் ஏகதேசத்தில் இச்சை தோன்றும்; இந்நிலையில் ஆணவ மறைப்பிலிருந்து உயிரின் இயல்யான அறிவு இச்சை செயல்களை விளக்குதலினால் இக்கலை என்பது இயல்பு என்பதன் சமபதமான சுவபாவம் என்பதனால் குறிக்கப்பட்டதெனல் பொருத்தமாம் என்பது இவர் கருத்து. இயல்பான ஆற்றலைத் தோற்றுவிப்பதை இயல்பெனல் உபசார வழக்காற் பெறப்படும். ஆகுபெயர் வழக்கில் காரிய ஆகுபெயர் எனலுமாம். இனி, பூதானி என்பது வித்தையைக் குறிப்பது. பூதம் என்ற பதத்திற்கு ஞானம் என்ற பொருள் இருத்தலும் குறித்த இந்த ஞானமும் உயிர் விமோசனத்துக்கான ‘சித்’ என்னும் ஞானமன்று, உயிரின் பந்தகாலத் தேவைக்கான சடஞானம் ஆதலும் பற்றியாம். அதற்கு ஞானமென்ற பொருளுண்மை வேத நெறி தழைத்தோங்க ........ — என்னும் பெரியபுராணச் செய்யுளில், பூதபரம்பரை பொலிய — ஞானபரம்பரை பொலிவுற — என வருவதனாற் பெறப்படும். இவற்றால் மேற்குறித்த உபநிடத மந்திரத்திற் சைவசித்தாந்தம் கூறும் அசுத்த மாயா தத்துவங்கள் ஏழும் அமைந்திருத்தல் தெட்டத் தெளிவாகும். குறித்த இவ்விரண்டு பதங்களையுஞ் சந்தர்ப்பத்திற்குப் பொருந்த நோக்கி



அப்பதங்களைவிட்டு நீங்காதுள்ள அவற்றின் தாற்பரியப் பொருளைக் கண்டறியும் நோக்கு, சித்தாந்த நோக்கு எனப்படும். சேர். பொன். இராமநாதன் விவிலியபத மொழிபெயர்ப்பாளர் செயலிற் கண்டு காட்டியதாக அவர் பற்றிய பகுதியில் அவதானிக்கப்பட்ட அதே திறமையே இங்கும் வேண்டப்பட்டிருக்கின்றது. ஆனால், இம்மந்திரத்தை மொழிபெயர்த்த கலாநிதி றோவர் ( Dr. Roer ) என்ற அறிஞர்,

‘காலம் காரணமா, பொருள்களின் சுய இயல்பு காரணமா, தற்செயல் ( Accident ) காரணமா, பஞ்சபூதங்கள் காரணமா, இயற்கை ( Nature ) காரணமா, உயிர் காரணமா என்பது சிந்திக்கப்பட வேண்டும். இவ்வனைத்தின் கூட்டந்தானும் காரணமாகாது. ஏனெனில், உயிர் மற்றொன்றில் தங்கியிருக்கிறது. ( The soul remains ) ஜீவாத்மாவும், சுயமான ஆற்றல் அற்றதாகலின் காரணமாதல் சாலாது. அதில் சுகதுக்க காரணம் தங்கியுள்ளதனால் என மொழிபெயர்த்துள்ளார்.

இம்மொழிபெயர்ப்பில் சுவபாவம் – Own nature of things, யதிருச்சா – Accident, யோனி - Nature, நியதி – The necessary consquencess of work என அவர் காட்டுவனவற்றில், மொழி பெயர்க்கப்பட்டதோடே அவற்றால் உணரப்படவேண்டிய தாற்பரியப் பொருளும் பெயர்க்கப்பட்டாகின்றது. இதை எடுத்துக் காட்டிய திரு. விசுவநாதன் இதற்குக் காலும் இல்லை; தலையும் இல்லை என்கிறார். கிடைக்கக்கூடிய மற்றைய மொழிபெயர்ப்புக்களுள்ளும் இதைவிடத் திறமையான மற்றொன்று காண்டற்கில்லை. 1987 இல் வெளியான சுவாமி தியாகீசானந்தாவின் மொழி பெயர்ப்பும்,

‘ சுவபாவ – Nature, யத்ருச்சா – Chance, பூதானி – Matter, யோனி – Energy, சிந்தியா – Cannot bear examination ’ என்றே காண்கிறது. இச் சுலோகத்தில் வரும் எதிர்மறை யிடைநிலையான ‘ ந ’ என்பதை அநாவசியமாக, “ சிந்தியாவோடு ” கூட்டியதால் பொருளுண்மை விளக்கத்தை மேலும் குழப்பத்துக்குள்ளாக்கி விட்டமை மட்டுமே இதன் கண் விசேஷம் அல்லது பிறிதில்லை. இவற்றையெல்லாம் துருவி நோக்கி நிராகரித்து விட்டு, இதற்கு முன்னும் பின்னுமான இரு சுலோகங்களையும் சேர்த்து திரு. விசுவநாதன் வாசகர்களுக்குத் தரும் திருத்தமான மொழிபெயர்ப்பு வருமாறு:–

1. பிரமவிசார முன்னோர் பின்வருமாறு விசாரிக்கிறார்கள்: பிரபஞ்சத்துக்குக் காரணமான பிரமம் எது? நாம் எங்கிருந்து தோன்றினோம்? யாரால் நாம் வாழ்கின்றோம்? முடிவில் நாம் செல்லதெங்கு? யாரால் பிரேரிக்கப்பட்டு நாம் இன்பதுன்ப அனுபவம் பெறுகின்றோம்? பிரமத்தை அறிந்தோரே கூறுங்கள்.

2. காலம், கலை, நியதி, இச்சை, அராகம், வித்தை, மாயை, புருஷன் என்பவற்றில் ஒன்று கருதப்படலாம். ஆனால், இவற்றில் ஒன்றும் காரணமாதல் செல்லாது. ஏனெனில் இவை ஒவ்வொன்றும், சடமும், சித்தாகிய ஒன்றால் இயக்கப்படுவதும் ஆதலின். ஆன்மாவும் இன்பதுன்ப அனுபவங்களுக்கு உட்படுவதாகலின் அதுவும் இதற்குக் காரணமாம் முதல்வனாகாது.

3. தியான யோகத்தில் ஈடுபட்ட ரிஷிகள் இறைவனின் சுயமான சக்தியைக் கண்டார்கள். உயிரின் சுபகுணங்களால் மறைக்கப்பட்டதாக அதாவது, உயிரின் சுட்டறிவால் அறியப்படாததாக அது விளங்கிற்று. அச்சக்தியை உடையவனே இறைவன். காலம் முதல் ஆன்மா ஈறாகச் சொல்லப்பட்ட இவ்வனைத்தையும் அவனே அதிட்டித்துள்ளான் — என்பது.

குறித்த மூன்று மந்திரங்களாலும் உணர்த்தப்படுவதாவது: பிரமமே பிரபஞ்சத்தின் முழுமுதலும் அதைப் படைத்ததுமாம். காலம் முதலிய மாயாதத்துவங்கள் அனைத்தும் சடம். ஆன்மா சித்தேனும் சுகதுக்கானுபவங்களுக்கு உட்பட்டாகவேண்டும் பந்தமுளது. ஆகலின் அவற்றின் தோற்றத்திற்குக் காரணமாதல் செல்லாது. இங்ஙனம் காட்டுதலின் மூலம் முப்பொருளுண்மை இம்மூன்றினாலும் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது.[62]

" பீடுறுகட்டுத் தானாய்விட்டுப் பெயரா திதுசடமாம்
பிணிபட்டோன் அசுதந்திர னாகும் பிணிபெய ரச்
செய்வோன்
நீடு சுதந்திரம் உண்டாமொருவன் எனுமிவ் வேதுவினால்
நிகழ்பதி பசுபா சம்மெனு முப்பொருள் நிச்சயமாம் "

என நிறைவுறுகின்றது அவர் மொழிபெயர்ப்பும் அதன் குறிப்பும்.



உபநிடத மொழிபெயர்ப்பென்பது ஏதாகிலும் பயன் செய்யக் கூடியதாய் இருக்க வேண்டில், அது ( உபநிடதம் ) தன்னியல்பால் தொடர்பு கொண்டிருக்கும் மெய்யியல் உண்மைப்பகுதியை முதலிற் கணித்து வைத்துக்கொண்டு சம்பந்தப்படும் பதங்கள் அவ்வுண்மையை உட்கொண்டிருக்கு மாற்றை நூலுணர்வாலோ உள்ளுணர்வாலோ நிச்சயமாகத் தெளிந்து கொண்டு மொழிபெயர்த்தல் கடனாகும் என உணர்த்துதல் மேற்கண்ட விபரத்தின் தாற்பரியமாம். இவ்வாசிரியர் ஒரு கட்டத்தில் நேர்ந்த தமது சுய அனுபவத்தைத் தெரிவிக்கும் சுவாரஸ்யமான ஒரு செய்தி இத் தொடர்பிற் கருதத்தகும்.

ஈசாவாஸ்ய உபநிடதத்தில் 12-ம் மந்திர விளக்கம் ஆராய்கையில் அவருக்கேற்பட்ட நேர்முக அனுபவம் அது.

அந்தம் தம : ப்ரவிஷந்தி யே சம்பூதிம் உபாசதே
ததோ பூய இவ தே தமோ ய உ
சம்பூத்யாம் ரதா :
என்பது அம்மந்திரம்.

அசம்பூதியை உபாசிக்கிறவர்கள் காரிருளில் விழுகின்றனர்; சம்பூதியை உபாசிக்கிறவர்கள் அதிலும் கூடிய இருளில் விழுகின்றனர் என்பது இதன் பருமட்டான பொருள்.

இதில் மொழிபெயர்ப்பாளர்களைத் திக்குமுக்காட வைப்பன அசம்பூதி, சம்பூதி எனும் இரு பதங்களும்.

| | | |
|---|---|---|
| ஒருவர்: | அசம்பூதி | — மூலப்பிரகிருதி ( uncreated ) |
| | சம்பூதி | — பிரகிருதி ( created ) |
| இரண்டாமவர்: | அசம்பூதி | — பிறவாமை |
| | சம்பூதி | — பிறப்பு |
| மூன்றாமவர்: | அசம்பூதி | — உண்மைக் காரணமல்லாதது |
| | சம்பூதி | — உண்மைக் காரணம் |
| நான்காமவர்: | அசம்பூதி | — சமயத் தெய்வ வழிபாடு |
| | சம்பூதி | — சமயச் சடங்கு |
| ஐந்தாமவர்: | அசம்பூதி | — காரணப் பிரமம் |
| | சம்பூதி | — காரியப் பிரமம் |

இவற்றை உற்று நோக்கி முதல் நான்கையும் கண்ட அளவிலேயே கழித்துவிட்டு ஐந்தாவதில் மட்டும் சிந்தையைச் செலுத்தி விசாரஞ் செய்கையில் அவருக்கு அதன் சார்பில் நேர்ந்ததை அவர் வாக்கிலேயே காண்போம்.

எந்நிலையிலுள்ளதாயினும் பிரமத்தை வணங்குவோன் இருளில் விழவேண்டுவதேன்? கடவுளை வழிபடுவோன் எந்த உருவில் வழிபட்டாலும் அவன் வழிபாட்டுக்கான பலன் இருந்தேயாகும் என்பது வழிபாட்டுக் கொள்கை விளக்கமாயிற்றே. அங்ஙனமிருக்க காரணப்பிரமத்தை வழிபடுவோன் விழும் இருளிலும் பார்க்கக் கூடிய இருளில் காரியப் பிரமத்தை வழிபடுவோன் வீழ்வதென்பது என்னை? ஒருகால், மார்க்முல்லர் உபநிடத மந்திரங்களைக் குறித்து —

'உபநிடதத்திலுள்ள மந்திரப் பகுதிகள் சில அர்த்தமற்றவை; அறிவுக்கொவ்வாதவை; பொருளற்ற பிதற்றல்கள்; வெறும் குப்பைகள்'

எனக் குறிப்பிட்டது இத்தகு மந்திரங்களைக் குறித்துத்தானோ என இப்படியான சிந்தனை விசாரத்தில் நாட்கள் பல கழிந்தன. திருப்தியளிக்க வல்ல ஒரு வழியும் தோன்றவில்லை. இந்நிலையில் கைதந்துதவக்கூடும் நூலுதவியோ ஆளுதவியோ வாய்த்ததுமில்லை. இப்படியிருக்கையில் ஒருநாள் இருந்தாற்போல் என்னிடத்தில் ஓர் விளக்கம் திடீரெனப் பட்டெழுந்தது. எனக்கும் வேதக்காட்சி உதயமாய் விட்டாற் போன்ற பிரேமையில் துள்ளிக் குதிக்கலுமானேன். அச்சுலோகத்தில் அசம்பூதி என்றது கேவலாவத்தையை. சம்பூதி என்றது சகலாவத்தையை. அசம்பூதியை உபாசித்தல் என்பது கேவலாவத்தை வசப்பட்டிருத்தல்; சம்பூதியை உபாசித்தல் என்பது சகலாவத்தை வசப்பட்டிருத்தல் என்ற விளக்கம் தன்னில் தானாகவே என்னில் உதயமாயிற்று. அதை என் கற்ற அறிவில் வைத்து நோக்குகையில் அது முற்ற முற்றச் சரியே எனப் பட்டது. சம்பூ-ஆகு, எனவே சம்பூதி-ஆக்கம், அசம்பூதி – ஆக்கமுறாநிலை. அதாவது உயிர் தனு, கரண, புவன, போகம் ஆகியவற்றால் ஆக்கமுறாது ஆணவத் தனிமையில் இருந்த நிலை. அதுவே கேவலநிலை எனப்படுவது. அதற்கெதிர் சம்பூதி – ஆக்கம் பெற்ற நிலை. அதாவது தனு. கரண, புவன, போகங்களின் சேர்க்கை பெற்று உயிர் தான் காரிய அனுபவங்களுக்கு ஏற்றதாகும் நிலை. அதுவே சகலநிலை எனப்படுவது. கேவலநிலை அனுபவப் பேற்றிற்கு லாயக்கற்ற நிலை.



சகல நிலையோ அதற்கு ஏற்ற நிலை. அவ்வகையாலும் அவை அசம்பூதியும், சம்பூதியுமாம். இனி, கேவல நிலையுற்றோன் இருளில் இருத்தல் சொல்லாமே அமையும். சகல நிலையுற்றவன் இருளில் விழுதல் ஆமாறெங்ஙனம்? என்ற விசாரத்துக்கும் விளக்கம் உண்டே. ஆன்மாவுக்குத் தனு, கரண, புவன, போகங்களை இறைவன் கொடுத்தது அவற்றை உரியமுறையில் உபயோகப்படுத்தி அதன் மூலம் ஆன்ம விளக்கம் பெற்று முத்தியை நாடச் செய்தற் பொருட்டே. அது, மாயாதனு விளக்காம், என்னும் சிவஞானபோதச் செய்யுளாலும், பெறுதற்கரிய இம்மானுட சரீரத்தை நாம் பெற்றது கடவுளை வணங்கி முத்தி இன்பம் பெறற் பொருட்டேயாம் என்னும் நாவலர் வசனத்தாலும் பெறப்படும். ஆனால் எல்லோரும் அந்நெறி நிற்றல்தான் இல்லையே! எத்தனையோ பலர் தமக்குக் கிடைத்த தனு, கரண, புவன, போகங்கள் தப்பால் அறியாமை பெருகிப் பாவம் பல்கி நரகப்பேறு உறுதற்கே அவை சாதனமாம்படி செய்துவருகின்றார்கள். புண்ணியம் செய்தவனுக்கு ஒளி உலகப்பேறு எவ்வாறோ அவ்வாறே பாவிக்கு இருளுலகப்பேறு என்பதும் பிரசித்த உண்மை. அதைக் குறித்தேதான் இம்மந்திரம்,

" ததோ பூய இவ தே: தமோ ய உ
சம்பூத்யாம் ரதா: " எனக் கூறிற்றாம்.

இனி, 'கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்' என தாயுமானசுவாமிகள் கூறுவதில் காணக்கிடப்பதோர் நயமும் இரசனையும் இம்மந்திரத்திலும் வைத்து நயந்து இரசிக்கக் கிடத்தல் காணத்தகும். இங்கு கல்லாத பேர்கள் கற்றவர்களிலும் நல்லவர்கள் என்பது குறித்த மந்திரம் தரும் அசம்பூதி உபாசகர், சம்பூதி உபாசகரில் சிறந்தவர் என்னும் அதன் மறுதலைக்கு ஒக்கும். கற்றவர்கள் கல்லாதாரிற் தாழ்ந்தவர் என்பது, கற்றதின்படி நிற்காதாரைப் பற்றியதாம். அதுபோல் சம்பூதியாகிய சகல நிலையுற்றவர் அசம்பூதியாகிய கேவல நிலையாளர்களிலும் தாழ்ந்தவர் என்றது சகல நிலைக்குரிய தனு, கரண விசேடங்களைப் பெற்றிருந்தும் அவை தரப்பட்ட நோக்கத்திற்கு அனுகுணமாக ஒழுகாதாரைப் பற்றியதாம் என அறியப்படும்.[63]

இங்ஙனம் மற்றும் மற்றும் உபநிடதங்களின் சார்பிலும் புலப்பட்டுத் தோன்றும் விசுவநாதனின் மேதாவிலாசம் அவ்வவற்றுக்கான விளக்கப் பகுதிகளிற் கண்டு நயக்கத்தகும்.

இனி, இதே சிரத்தைப் பாங்குடன் அவர் இயற்றி வெளியிட்ட திருமந்திர ஆங்கில மொழிபெயர்ப்பு நூல் பற்றியும் சிந்திக்கத்தகும். இவர் திருமந்திரத்திற் சைவசித்தாந்த முக்கியப் பொருள் விளக்கத்திற்கு இன்றியமையாத 300 திருமந்திரப் பாடல்களைத் தெரிந்து அவற்றின் பொருட்பயன், சிந்தாமல் சிதறாமல் செம்பாகமாக மொழிபெயர்த்துள்ளார். சைவசித்தாந்தப் பொருளுண்மைகளோடு திருமந்திரப் பொருளுண்மைகளை ஒப்புநோக்குவார்க்கு இதமளிக்கக்கூடிய சிறந்த ஒரு ஆக்கம் இதுவாகும்.[64] திரு. விசுவநாதபிள்ளையின் உபநிடத மொழிபெயர்ப்பிற் காணும் சைவசித்தாந்த மேதாவிலாசப் பதிவுகளை அறிவார்க்குத் திருமந்திர மொழிபெயர்ப்பில் அவற்றின் திறம் இருக்குமாறு சொல்லாமலும் அமையும்.

Thirumanthiram Analysis என்ற பெயரில் வெளிவந்த இந்நூல் சமீப காலத்தில் நம்மத்தியில், சைவசித்தாந்த முடிவைச் சிதறடிக்க எழுந்த ஒரு புது இயக்கத்தின் எடுகோள்களை[65] உகந்த முறையில் நிராகரிக்க முன்வந்த ஒருவருக்கு உறுதுணையாயிருந்த தன்மையை மட்டும் இங்குக் குறிப்பிடுவாம்.

சென்ற 3 — 4 தசாப்தங்களில் பிரசித்தி பெற்ற ஹவாய் சைவசித்தாந்த ஆதீனத்தார் உலகில் உள்ள 60 கோடி இந்துக்களையும் ஒன்றுபடுத்தும நோக்கில் தற்போது உள்ள சைவசித்தாந்த முடிவில் ஒரு மாற்றம் கொண்டுவருதல் இன்றியமையாததெனக் கருதி அதற்காக முயல்வாராயினர். அதன்பேறாக அவர்கள் ஆக்கிய புதிய கோட்பாடாவது:

ஆன்மா முழுமையானது என்பது சரியல்ல. அதிலும் The essence of the soul, The soul body என இரு பகுப்புண்டு. முன்னையது, சிவனின் அம்சமாய்ச் சிவனிலிருந்து தோன்றியது. பின்னையது படைக்கப்பட்டது. பந்த நீக்கத்தில் படைக்கப்பட்ட பகுதியாக soul body அழிய, The essence of the Soul சிவனோடு ஒன்றாய்விடும். இதை அகில இந்துக்களும் ஏற்றுக் கொண்டுவிட்டால் பிறகு வேதாந்தம் சித்தாந்தம் என்ற வேறுபாடு நிலவ வேண்டிய அவசியமில்லை. ஆகவே அகில உலகிலுமுள்ள சகல இந்துக்களும் தம்முட் பிணக்கின்றி ஒன்றுபட்டுக் கொள்வதற்கு இது ஏற்ற உபாயமாகும் — என்பது.

இப் புதிய கோட்பாட்டுக்கு ஆதாரந்தேடி அவர்கள் மேற்கொண்ட விசாரணையில் எப்படியோ திருமந்திரத்தில் அதற்காதாரமுண்டென எவர் வாயிலாகவோ அவர்கள் அறியும்படி



நேர்ந்துவிட்டது. அதை நம்பிச் சென்னைசார் கல்விமான் ஒருவர்[66] மூலம் திருமந்திரம் முழுவதையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பித்துக் கொண்டனர். தமிழறியாதார் ஆதலின் மொழிபெயர்ப்புத் திருமந்திரமே அவர்க்குப் பிரமாண நூலாயிற்று. ஆனால், துரதிஷ்ட வசமாக மொழிபெயர்ப்பில், பிரதானமாகச் சைவசித்தாந்த முக்கியத்துவம் வாய்ந்த பகுதிகளில் அர்த்தப் பிறழ்ச்சி நேர்ந்திருப்பதை அவர் அறிந்திலர். மொழிபெயர்ப்பாளர் மேல் வைத்த அபார நம்பிக்கையால் அறிந்தோர் சொல்வதையும் ஏற்றிலர். மொழி பெயர்ப்புப் பிழைகளோடுள்ள அப்பகுதிகளே சைவசித்தாந்தத்தின் பிரமாணிக்கமான பகுதிகள் என்ற துணிவு அவர்களை ஆட்டிப் படைக்கலாயிற்று. அவ்வகையில், திருமந்திரம் 115[67] ஆஞ் செய்யுளில் இறுதி அடியாகிய 'பதி அணுகிற் பசு பாசம் நில்லாவே' என்பதற்குப் பதி அணுகுகையில் பசு — பாசம் நில்லாது என்ற அர்த்தப்பட Let but Pathi touch Pasu – Pasa is as naught[68] என மொழிபெயர்ப்புக் காட்டிவிட்டமை வெறுவாய் மெல்பவருக்கு ஒரு வாயவல் கிடைத்தது போன்ற உற்சாகத்தை ஆக்கிவிட்டது. கடவுளைச் சேரும்போது பசு இல்லாமற் போய்விடும். அதாவது சிவனோடு ஒன்றாய் ஒன்றிவிடும். என்றதனால், எது எங்கு ஒடுங்கிற்றோ அது அங்கு தோன்றும் என்ற நியமப்படி ஆன்மா – அதன் essence பகுதி – சிவனிலிருந்தே தோன்றியமைக்கு அது தகுந்த ஆதாரமாம் என்று எங்கெங்கும் வாதிடுவராயினர். பிரபல சைவஸ்தாபனங்களும் ஆதீனங்களும் அவர்கள் கோட்பாட்டை ஏற்றில. அதனால் அவை போற்றும் மெய்கண்டார் அருணந்திசிவாசாரியார் தரத்திலுங் கத்திபாய்ச்சவுந் தொடங்கினர். மெய்கண்டதேவரை Chilidish Prodigy என்றனர். இந்நிலையில் அவர்கள் கோதாட்டும் மொழிபெயர்ப்பிலுள்ள அர்த்தப் பிறழ்ச்சிகளை அம்பலப்படுத்தி அதன்மூலம் அவர்கள் புதுக் கோட்பாட்டை நிராகரிக்க முன்வந்தவர், அன்று மலேசியாவில் இருந்த யாழ். அராலிவாசியாகிய சித்தாந்த வித்தகர் கந்தையா மகன் பாலசுந்தரம் என்பவர். Souls are beginning less[69] என்ற பெயரில் அவரியற்றிய ஆங்கில நூலிற் குறித்த மொழிபெயர்ப்பாளரின் தவறுகளை முற்றுமுழுதாக அவர் எடுத்துக்காட்டுதற்கு முக்கியமான ஆதார நூலாயிருந்தது திரு. விசுவநாதனின் திருமந்திர மொழிபெயர்ப்பு நூலாகிய Thirumanthiram analysis என்ற நூலேயாதல் குறிப்பிடத்தகும்.

உதாரணத்துக்காகப் பின்வருவதனை அவதானிக்கலாம்.

"ஒன்றும் இரண்டும் இலதுமாய் ஒன்றாக
நின்று சமய நிராகார நீக்கியே
நின்று பராபரை நேயத்தைப் பாதத்தாற்
சென்று சிவமாதல் சித்தாந்த முத்தியே"

— திருமந்திரம் 1437

இதற்கு மொழிபெயர்ப்பாளர் கூறுவது:-

Thou and He are not two sepaıate
Thou and He are but one united
Thus do thou stand freed of all secetarian shacles
adore thou the feet of para parai and with Siva become one.
That the way Siddhanta fullfilleth.

நீயும் அவனும் ஒன்றின் ஒன்று; வேறான இரண்டல்ல. நீயும் அவனும் ஒன்றித்த ஒன்று. இவ்வாறு நீ பந்தத் தடைகளின் நீக்கி நிற்கின்றாய். பராசக்தியின் திருவடிகளைப் போற்றிச் சிவனுடன் ஒன்றுபடு. சித்தாந்தப் பேற்றின் நிறைவு அதுவே - என்பது. இதில் உள்ள தவறைக் கண்ணுற்ற திரு. பாலசுந்தரம் திரு. விசுவநாதன் இதே செய்யுளுக்குச் செய்த மொழிபெயர்ப்பை முதலில் எடுத்துக் காட்டுகிறார். திரு. விசுவநாதனின் மொழி பெயர்ப்புப் பின்வருமாறு:

ஒன்றாயும் இரண்டாயும் அவ்விரண்டுமாந் தன்மையின்றா யும் தொடர்பினால் ஒன்றுபடநின்று சமய பேதம் நீக்கித் திருவருளின் மூலம் ஒருவன் தான் வேண்டும் ஆன்மீக இலக்கை அடைந்து சிவமாந்தன்மை எய்துகின்றான் என்பது அது. மேல் தொடரும் பாலசுந்தரம் விமர்சிக்கையில், முன்னைய மொழிபெயர்ப்பில் ஒன்றும் இரண்டும் இலதுமாய் என்றதற்கு நீயும் அவனும் வேறான இரண்டல்ல (Thou and He are not two separated) என விளக்கம் கூறுதற்கு நியாயம் எதுவும் இல்லை சம்பந்தப்பட்ட சொற்கள் இதற்கு இசையமாட்டா. சிவஞான போதம் 2-ம் சூத்திரத்து அவையே தானேயாய் — அவையாய், — தானாய், அவையும் — தானுமாய் எனவரும், ஒன்றாதல் — வேறாதல் — உடனாதல் என்ற முத்திறத்தையும் உட்கொண்ட அத்துவித உண்மை குறிக்கும் நிலையிலேயே அச்சொற்கள் நிற்கின்றன. இதன் விளக்க ஒளியில் மொழிபெயர்ப்பாளராகிய திரு. பி. நடராஜன் மொழிபெயர்ப்புப் பிழைக்கப்பட்டதாதல் தெளிவு. சிவமாதல் என்பது திரு. விசுவநாதன் கூறுதல் போன்று சிவமாந்தன்மையுறுதல் என்றதன்றி திரு. பி. நடராஜன் கூறுகின்ற படி சிவனோடு ஒன்றாதல் என இன்றாம் என உண்மையை நிறுவியுள்ளார்.70



இவற்றிலிருந்து சைவசித்தாந்த அறிவியல் நிலைபேற்றுக்கு விசுவநாதனின் மேதை உபகரித்திருக்குமளவு குறித்தறியப்படும்.

## திருவிளங்கதேசிகர்

தமிழிலுள்ள சைவசித்தாந்த சாஸ்திரங்கள் 14 - ன்கிற் சிவஞானபோதம், சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம் என்று மூன்றும் மேலாந் தரத்தன. போதம், சித்தி, பிரகாசம் என்ற முறையில் ஞானம், அது கைவரப்பெறல், அதனால் நேரும் விளக்கம் என முறையே அமையும் பொருளில் இவை தம்முள் ஓர் அந்தரங்கத் தொடர்பு உடையனவாயிருத்தல் தோன்றும். இவற்றுள், சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம் என்ற இரு நூல்களுக்கும் மிகப் பிற்காலத்திலே இனிமை பயக்கும் எளிமை உரை இயற்றியவர் மானிப்பாய் திரு. மு. திருவிளங்கம் என்பவர். இவர் தமிழ், சைவம், ஆங்கிலம், தருக்கம் என்ற நான்கிலும் துறைபோய கல்விமானாய் ஆசிரியத்தொழில், நியாயவாதித் தொழில், நீதிபதித்தொழில்களிற் காலத்திற்குக்காலம், பிரசித்தி பெற்றவராய் இருந்ததுடன் ஆன்மீக விழிப்புற்று ஞானசாஸ் திரங்களை, விசேடமாக சிவஞானசித்தியார், சிவப்பிரகாசம் என்ற இரண்டையும் வாழ்க்கை நூல்களாகக் கொண்டு ஆராய்ந்து வந்தவர். அவை சார்ந்தமட்டில் மற்றெந்த உரைகாரருக்கும் வாய்க்காத அளவு தெளிவும் எளிமையும் இவருரையிற் காணப் படுதல் இதற்கோர் ஆதாரமாகும். இவருக்கும் யாழ் யோகர் சுவாமிகளுக்கும் இடையில் இருந்த தொடர்பு பிரசித்தமானது. சுவாமிகள் உள்ளம் கலந்த நண்பனாகவும் இவர் விளங்கியிருந்த வாற்றால், 'அவன், சித்தியார், சித்தியாரென்று உணர்ந் துணர்ந்து சித்தியார் மயமாய்ப் போனான்' என்று சுவாமிகள் இவரைக் குறித்துக் கூறியதாக ஆப்தர் வாயிற் கேட்கப்பட்ட துண்டு.

சிவஞான சித்தியார்க்கு ஏலவே அறுவர் உரைகள் வழக்கில் இருந்துள்ளன. அறுவர் உரையையும் ஆராய்கையில் அவ்வப் போது தெளிவின்மை தோன்றின் அவர் உடனடியாகச் சுவாமி கள் இருக்குமிடந் தேடிப் புறப்படுவார் என்றும் சிலவேளை இடைவழியில் சுவாமிகள் சந்திக்கப்பெறினும் சந்நிதி மாத்திரையானே சந்தேகம் தீர்த்துக்கொண்டு திரும்பிவிடுவார் எனவும் அறியப்படுகிறது. அத்தகைய ஒரு பக்குவான்மா ஆதலுக்கு அநு

குணமான சைவாசார அனுட்டான சீலராகவும், சிவபூஜாதுரந்தரர் ஆகவும் விளங்கி அப்பண்புள்ளாருக்கே சைவசித்தாந்த அறிவுத் தெளிவும் பலப்பேறும் உளவாம் என்னும் உண்மைக்கு மலை இலக்காய்த் திகழ்ந்தவர் திருவிளங்கத்தார். அவ்விசேடம் பற்றித் திருவிளங்கதேசிகர் என்று கௌரவமாக அழைக்கப் பெற்றவர்.

ஆள்தான் நூல், நூல்தான் ஆள் என்ற நியாயப்படி இவரில் விளங்கிய சைவத் தூய்மை விளக்கமே இவரின் உரை விளக்கப் பிரகாசம் எனல் தகும். சிவஞானசித்தியார்க்கு இவர் வரைந்த உரையில் ஒரு இடத்தை உதாரணத்துக்காகத் தொட்டுப்பார்த்தல் தகும்.

சிவஞானசித்தியார் முதலாம் சூத்திரம் இரண்டாம் அதிகரணத்து 2-4 [71] செய்யுட்பகுதி இங்கே தழுவப்படுகிறது. சிவன் உலகத்தைப் படைத்து அளித்து அழிப்பன் எனக் கூறப்படும் முதல் அதிகரணப் பொருட்குத் தொடர்பாம் வண்ணம் அவர் அதனை எவ்வண்ணம் நின்றியற்றுவர் என்ற வினாவை எழுப்பி அதற்கு விடை கூறும் பாங்கில் அமைகிறது இப்பகுதி. இரண்டாம் செய்யுள் அவ்வினாவை எழுப்ப மூன்றாம் நான்காம் செய்யுள் அதற்கு உவமைமூலம் விடைகூறும்.

பண்ணுவதெங்கே நின்றிங்கு? பண்ணுவது எங்ஙனம் நின்று என்பது கேள்வி.

உலக காரியங்களைச் சொல்வது போல் இதனைச் சொல்லிக்கொள்ள இயலாது. ஆனால் ஒருவகையாற் சொல்லலாம். (ஒருவகையால் என்றது ஒரு உவமைமூலமாக என்றபடி) ''ஞாலம் ஏழினையும் தந்து நிறுத்திப்பின் நாசம் பண்ணும் காலமே போலக் கொள்நீ நிலை செயல் கடவுட் கண்ணே'' என்பது விடை. கண்டதைக் கொண்டு காணாததை உணர்த்துதல் என்ற முறைப்படி காலம் என்ற தத்துவம் நின்று பிரபஞ்சத்தைத் தோற்றி நிலை நிறுத்திப் பின் அழித்தல் போல, இறைவனும் நின்று பிரபஞ்சகாரியம் பண்ணுதல் என்பது இதன் பொழிப்பு. இதன்கண்' நிலை செயல்' என்ற தொடர் முக்கியமானது. அது நிற்றல், செயலாற்றல் என்ற இரு அம்சங்கள் கொண்டது. அதன்படிக்கு, காலம் நிற்பது எப்படி, அப்படி இறைவன் நிற்பன். காலம் செயலாற்றுவது எப்படி, அப்படி இறைவன் செயலாற்றுவன் என்பதற்கான விளக்கம் இங்கே



அவசியமாகின்றது. இவ்விரண்டம்சமும் இடம்பெறாத பட்சத்தில் உரைவிளக்கம் தெளிவானதாயிருக்க முடியாது. இந்நிலையில், பிரசித்தி பெற்ற உரையாசிரியராகிய சிவஞான முனிவர் இதற்குக் கூறிய உரை பின்வருமாறு:

காலம், உலகமெல்லாவற்றையும் தோற்றுவித்து நிறுத்திப்
பின் அழித்துக் காரியப்படுத்துங்கால் எல்லாப் பொருட்கும் தான்
ஆதாரமாய்த் தனக்கோர் ஆதாரமின்றி நிற்றல் போலச் சிவ
சக்தியும் நிராதாரமாய் நின்றே உலகத்தைக் காரியப்படுத்தும்
முறைமையை நீ உணர்ந்து கொள்வாயாக[72] என்பது உரை.

இதைப் படிப்பவர்கள், மேல் அவசியமாக வேண்டப்பட்ட
இரு அம்சங்களையும் தெளிவாகக் கண்டு கொள்ளும் வாய்ப்பு
இல்லை. அத்துடன் நிராதாரமாய் நிற்கும் இயல்பு சிவம் ஒன்
றுக்கே உரியதெனக் கூறும் சைவசித்தாந்தத்தில் காலம் நிரா
தாரமாய் நின்று செயலாற்றும், சிவசக்தி நிராதாரமாய் நின்று
செயலாற்றும் என்ற கருத்துக்கள் பொருந்துமாறெங்ஙனம்? என்ற
மலைப்பு உண்டாதலும் தவிர்க்க முடியாததாகின்றது. இந்த
மலைப்புக்கு இடம் தோற்றாதபடி, பிரபஞ்சத்தை உண்டாக்கி
நிலைபெறுவித்து அழிக்கும் காலம் போல சிவனும் அருபமாய்
வியாபியுமாய் நின்று பண்ணுவன் எனச் சிவாக்கிரயோகிகள்
உரைத்தாரேனும், மேல் அவசியமெனக் குறித்த இரண்டம்
சங்களின் தெளிவை அவர் உரையும் காட்டியதில்லை.

மறைஞான தேசிகர், காலம் எப்படி வடிவற்றிருந்தும் எப்
படிப் பலத்தைக் கொடுத்தது, அதுபோல? சிவனும் அமூர்த்தன்
ஆயினும் அவனது இச்சாசக்தியாலே சகத்தைப் பண்ணுவன்
என்றும், நிரம்பஅழகியதேசிகர் சிருட்டித்தும், திதித்தும்,
சங்கரித்தும் செய்கைக்குக கூடிநிற்கின்ற காலங்களின் உண்மை
போல, கர்த்தாவினுடைய ஆக்கினையினது நிலைமையையும்
அவனுடைய நிரதியங்களையும் புத்திபண்ணுவாயாக என்றும்
எழுதியிருக்கிறார்கள். இருவருரையும் குறித்த உவமான உவமே
யங்களை ' நிலை செயல் ' என்ற செய்யுட் கூற்றோடு படுத்து
நோக்கவில்லை என்பது இங்கு துலாம்பரமாகத் தெரிகிறது.

ஞானப்பிரகாசமுனிவர், சகல பிரபஞ்சத்தையும் தோற்றி
யளித்துப் போக்கும் அமூர்த்தமாய் அப்பிரத்தியக்ஷமாய்,
நிராதாரமாய் நிற்கும் காலம் போல, காரியம் பண்ணும் சிவ
னிடத்திலே நிராதாரமாய் நிற்கும் முறைமையும் சங்கற்ப
மாத்திர சந்நிதானத்தால் கிருத்தியம் நிகழும் முறைமையும்

காண்பாயாக என உரைத்த அளவில், 'நிலை செயல்' என்ற பாகுபாடு தோன்ற உரைத்தாரேனும், காலம் நிராதாரமாய் நிற்றல் என்ற கருத்தை அனுவதித்திருத்தல் மலைப்புக்கு இடமாகிறது.

தக்புருஷ நேசிகர் என்ற சித்தாந்த வல்லுநர் யாழ் நாவலர் வித்தியாசாலையில் முனிவர் உரை கொண்டு நடத்திய வகுப் பொன்றில், காலம் நிராதாரமாய் நிற்பது என்பது எப்படி என்ற எனது ஆசங்கைக்கு, குழப்படி 'பண்ணுகிறீர்போல் இருக்கு' என்று மட்டும் தெளிவு உரைத்தமை என் பசுமை நினைவில் இன்னும் உண்டு. ஞானப்பிரகாச முனிவர் உரை, முதலிற் குறித்த சிவஞான முனிவர் உரையோடு கால விஷயத் தில் ஒத்துள்ளதேனும் அவர் குறிப்பிட்டதுபோல் சிவசக்தி நிராதாரமாய் நிற்கும் என்ற தவற்றுக்கு இடமாகவில்லை. அவர் 'கடவுட்கண்' என இங்கு வரும் பதத்திற்கு சிவனிடத் திலே என்று நேர்பொருள் கண்டமையால் தப்பிக்கொண்டார். சிவஞானமுனிவர் 'கடவுட்கண்' என்றதில் கண்-சக்தி எனக் கொண்டு சிவனது சக்தி எனவுரைத்தமையால் தெளிவின்மை தோன்ற வைத்துள்ளார்.

இவ்வகையில், சித்தியார் உரைகள் சகலமுமே குறித்த செய்யுளில் அவசிய விளக்கம் வேண்டும் பகுதிக்கு உரிய உரை விளக்கம் தந்திருக்கவில்லை என்பது வெளிப்படை. இந்நிலை யில் திரு. திருவிளங்கதேசிகர் இப்பகுதிக்குத் தந்துள்ள உரையை நோக்குவோம்.

ஞாலம் ஏழினையும் தந்து நிறுத்திப் பின் நாசம் பண்ணும் காலமே போல் - உலகமெல்லாவற்றையும் தோற்றுவித்து நிலை பெறுத்திப் பின்பு அழித்துக் காரியப்படுத்தும் காலம் தான் துணைக் காரணமாகவும் சிவசக்தி நிமித்த காரணமாகவும் தம்முள் பிரிவின்றி நின்று அவற்றைக் காரியப்படுத்துதல் போல, நிலை செயல் - முதல்வன் தனது சக்தியைப் பொருத்தி நிற்கும் நிலையையும், பிரபஞ்சத்தைக் காரியப்படுத்தும் முறைமையை யும், கடவுட்கண்கொள் நீ - அம்முதல்வன் இடத்தும் வைத்து அறிவாயாக - என்பது தேசிகர் உரை.

இதன்கண், மேல் அவசியமெனக் கோரப்பட்ட இரண்டு அம்சத்துக்கும் உரிய விளக்கம் மிக எளிமையும் தெளிவுமாக இருத்தல் கண்கூடு. அதாவது காலம் எப்படி நின்று செயலாற்றும்



எனில், அது தான் துணைக்காரணமும் சிவசக்தி நிமித்த காரணமுமாய்த் தம்முட் பிரிப்பின்றி நின்று செயலாற்றும், சிவன் எப்படி நின்று செயலாற்றுவன் எனில் அவன் தனது சக்தி துணைக் காரணமும், தான் நிமித்த காரணமுமாகத் தம்முட் பொருந்தி நின்று செயலாற்றுவன் என்ற விளக்கம் இதில் வெட்டவெளிச்சமாய் அமைகிறது. அதேவேளை, கால மும் சிவசக்தியும் நிராதாரமாய் நிற்பன என, சிவஞானமுனிவர் உரை கொடுத்த மலைப்புக்கு இங்கே கிஞ்சித்தும் இடமில்லை. தம்முட் பிரிப்பின்றி என இங்குள்ள சொற்பிரயோகங்கள் முறையே காலத்துக்குச் சிவசக்தி ஆதாரம். சிவசக்திக்கும் சிவன் ஆதாரம். என்ற உண்மையைத் தோற்றி அவ்விரண்டும் நிராதாரமாய் நின்று செய்யும் என்ற முதல் முனிவர் கருத்தை யும், காலம் நிராதாரமாய் நின்றதென்ற மறு முனிவர் கருத்தையும் ஒரேயடியாக நிராகரித்திருக்கும் வெற்றியும் இங்கு கருதத்தகும். முதலிற் குறித்தபடி 2-ம் செய்யுள் கிளப்பிய வினாவுக்கு 3-ம் செய்யுள் தகுந்த விடை அளிக்குமாறு திரு விளங்க தேசிகருடைய உரையிற் கண்டோம். இனி 4-ம் செய்யுள் உதாரணம் ஆமாறு காட்டுதலில் தேசிகர் உரைப் பொருத்தம் அமையுமாறு காண்போம்.

அச்செய்யுள் தரும் உதாரணம் கற்றநூற் பொருளும் சொல்லும் ஆன்ம அறிவில் ஒடுங்கித் தோன்றல், சாக்கிரம் முதலிய அவத்தைகள் ஆன்மாவில் தோன்றி ஒடுங்கல் என்ற இரு நிகழ்வுகளை உதாரணமாகக் காட்டுகின்றது. காட்டி, இவைகள் போலப் 'பற்றொடு பற்றநின்றி நின்றனன்' - எனத் தெரிவிப்பது செய்யுட் பொருள் நிலை, மறைஞான தேசிகரும், நிரம்ப அழகிய தேசிகரும் அந்நிலையிற் 'பணியற நிற்பன்' 'பாரமற நிற்பன்' என்று முறையே அத்தொடர்க்குப் பொருள் கொண்டுள்ளனர். ஞானப்பிரகாசமுனிவர் இறைவன் தனது சக்தியாகிய சொரூப காரணத்தினது சங்கற்பத் தொழிலாகிய சந்நிதிச் சொரூப சம்பந்தியாய் வியாபித்திருப்பன் என உரைத் துள்ளார். இம்முவரும் ஒரு முகமாகவே பற்றொடு பற்றநின்றி என்பது ஒரே நிலையைச் சுட்டி நிற்பதாகவே கொண்டுள்ளனர். இதற்கு உரை கூறும் சிவாக்கிர யோகிகள் அத்தொடர் பற்றொடு நிற்றல், பற்றநின்றி நிற்றல், என இருமுகப்பட்டு நிற்பதாகக்கொண்டு உரைவகுக்கையில், பிரபஞ்சத் தோற்ற நிலை அழிவுகளின்போது இறைவன் பிரபஞ்சத்தில் தான் பற்றுதலின்றி அதிற் பற்றிய ஆன்மாவோடே தான் அநந்நிய மாக நின்றனன் என உரை தந்துள்ளார். சிவஞான முனிவர் குறித்த தொடரின் குறித்த இருதிறப்படு நிலையை ஏற்றுக்

கொண்டு அதில் ஒவ்வொன்று அச்செய்யுள் காட்டும் உதாரணம் இரண்டுக்கும் தனித்தனி ஒவ்வொன்றாகப் பொருந்துமாறு காட்டி உரைக்கையில் உதாரண ஒழுங்கை எதிர் நிரல்நிறை யாக்கி உரைத்துள்ளார். அவருரை; அவ்வகையில்

அவத்தைகள் ஆன்மாவில் ஒடுங்கித் தோன்றும் வழி ஆன்மா அவத்தைப்பட்டுத் துடக்குறுதல் போல இறைவன் எல்லாம் தன்பால் ஒடுங்கி உதிப்ப இலயம், போகம், அதிகாரம் என்னும் அவத்தைப் பட்டுத் துடக்குறு வோனாயினும், ஒருவன் கற்ற நூற் பொருளும் சொல்லும் வாதனாரூபமாய்ப் புத்தி தத்து வத்தை ஒட்டிப் போதத்தில் அடங்கி நின்று மீளத் தோன்று மிடத்து அவ்வான்ம போதம் அவற்றால் துடக்குறாதவாறு பற்றதின்றி நின்றனன் – எனவரும்.

இதன்கண் வரும் உதாரணங்கள் இரண்டும் உவமை சார் உதாரணங்கள், இரண்டிலும் ஆன்மா சார்பான பகுதிகள் உவமானங்களாகவும் சிவன் சார்பான பகுதிகள் உவமேயங் களாகவும் அமைந்துள்ளன. இவ்விரு இரட்டைகளில் ஒவ் வொன்று பற்றொடு நிற்றலுக்கும் ஒவ்வொன்று பற்றின்றி நிற்பதற்கும் இடையிலான வேறுபாடு எதில் தங்கியுள்ளதெனத் தெளிவாகத் தோன்றுமாறு செய்யுளியற்றிய ஆசிரியர் ஒன்று 'அடங்கித் தோன்றுதல்' மற்றது 'உதித்தொடுங்கல்' என்று விளங்க உரைத்திருக்கவும், ஏனோ அறியோம், முனிவர், அடங்கித் தோன்றல் என்றதைக் கிடந்தவாறே கிடக்கவிடாது தோன்றி அடங்கல் என மாற்றிக் கூட்டி உரைத்ததன் மூலம் செய்யுள் தெரித்துக் காட்டிய வேறுபாட்டை மறைத்து ஈரிடத்திலும் ஒடுங்கித் தோன்றல் என்ற கருத்தே படுமாறு செய்துள்ளார். அது சரியானால் பற்றொடு நிற்றல் பற்றின்றி நிற்றல் என்பவற்றுக்கிடையிலான வேறுபாடு கற்றநூற் பொருளுஞ் சொல்லுங் கருத்தினில் தோன்றி ஒடுங்குதல் 'சாக்கிராதி உயிரினில் உதித் தொடுக்கல்' என்ற நிகழ்ச்சிகளி லேயே தங்கவேண்டியாகும் இந நிகழ்வுகளிலும் ஆன்மா பந்த முறுதல் தவிர்க்க முடியாமையை ஆருமறிவர். ஆதலால் என்ன இந்த உரை என்ற சலிப்பும் மலைப்பும் எழுதல் இயல்பே.

இதற்கெதித், திருவிளக்க தேசிகர் இதற்குரைத்த உரையைத் காணில்,

ஒருவன் கற்றநூலின் பொருளும் அப்பொருளைக் குறிக்குஞ் சொல்லும் ஆன்ம அறிவின்கண் அடங்கித் தோன்றும் தன்மை போல, பொருளுந் சொல்லுமாகிய பிரபஞ்சம் எல்லாம் தனது



சத்தியிடமாக அடங்கித் தோன்ற முதல்வனும் பற்றொடு நின்றனன், சாக்கிராதி அவஸ்தைகள் ஆன்மாவில் உதித் தொடுங்குந் தன்மை போல பிரபஞ்சமெல்லாந் தன்னிடத்து உதித்தொடுங்க முதல்வனும் பற்றதின்றி நின்றனன் – என்றிருக் கும்.

இதில் செய்யுளியற்றியவர் விதித்தவாறே, அடங்கித் தோன்றல், உதித்தொடுங்கல்களில் குறித்த பற்றொடு நிற்றல், பற்றின்றி நிற்றல்களின் வேறுபாடு தங்கியிருத்தல் துலாம்பர மாகத் தெரிகிறது.

செய்யுட் சொற்றொடர்களை அநாவசியமாக மாற்றிக் கூட்டிச் செய்யுட் பொருளைச் சிக்கலுக்குள் மாட்டாமலும் நிரல் நிறையாயிருப்பதை வலிந்து எதிர் நிரல் நிறையாக்கிப் பொருள் விளக்கத்தில் மலைப்பை ஏற்படுத்தாமலும் தெளிவும் இனிமையுந் ததும்ப நேரிய முறையில் வெகுநிதானமாக விளக் கந்தரும், திருவிளங்க தேசிகரின் மேதா விலாசம் இதன்கண் நன்கு புலனாகின்றது.

இச்செய்யுள்களின் விஷயத்தில் தேசிகர் சிவஞான முனிவர் கருத்தை உண்மையில் மறுத்தே உரை செய்திருக்கின்றார். ஆனால், தன்னை வெளிக்காட்டிக்கொள்ளாமல். அது அவர் விசேட மகிமை. இதுபோல் மேதா விலாசமும் மகிமையும் விளங்க உள்ள உரைப்பகுதிகள் பிறவும் உள. நமக்கு இதுவே போதுமென்றாய் விடுகிறது. ஆதலின் ஒழிகின்றோம்.

இது இவ்வாறாகவும் There is probably nothing original in his commentaries' (his – Vilangam's )[73] என்றாருமுளர். நுணுகிப் படிக்காமல் மதிப்பீடு செய்யும் பழக்கத்துக்கு இது வோர் எடுத்துக்காட்டு.

தேசிகரது பிற நூல்களுள் கந்தரலங்கார உரையும் திருப் புகழ்த்திரட்டும் பிரபல்யம் பெற்றவை.

## முகவுரை

சித்தாந்தம் தமிழரின் பரம்பரைச் சொத்தெனத் நம்மினத்தின் ஒருசாரார் கூறக் கேட்கும்போது அதில் தழுவப்பட்டிருக் வேண்டிய ஓரம்சம் நழுவவிடப்பட்டிருக்குங் காட்சி தோன்று கிறது. எக்கலைத்துறை சார்பிலும் அத்துறையில் அறுதியாகத்

தெரியப்பட்டமுடிபு சித்தாந்தம் என்ற பெயரால் குறிக்கப்படும். அவ்வகையில் கணித சித்தாந்தம், சோதிட சித்தாந்தம், மாக்சிய சித்தாந்தம் என்ற வழக்குகள் பிரசித்தம். பிரமம் அனைத்துக் கும் உபாதானம் என்பது வேதாந்த சித்தாந்தம் எனப் பாணினி வியாக்கியானத்திற் பட்டோஜிதீக்ஷிதர் குறித்திருப்பதுமுண்டு. இது இங்ஙனமாக இவர்களுக்கு, வெகுபலரால் உத்தேசித்துக் கொள்ள உள்ளபடி, சைவத்தைத் தவிர்த்துத் தனியாகச் சித்தாந் தம் உண்டு. எனக் கொள்ளுந் துணிபு உள்ளதாதல் வெளிப்படை.

சைவசமய அநுபவத்தின் தெளிவுற்ற முடிபு சைவசித்தாந்தம். கணித சித்தாந்தம் கணிதத்தைவிட்டு வேறாயில்லாமைபோல, மாச்சிய சித்தாந்தம் மாக்சியத்தை விட்டு வேறாயில்லாமை போல, சைவசித்தாந்தம் சைவத்தைவிட்டு வேறாயிருக்கும் ஒன்றல்ல. ஆடம்பரத்துக்காக மட்டும் அணியப்படும் பட்டுப்பணி மேலங்கி போல் வனவல்ல சைவமும் சைவசித்தாந்தமும். ஊனுக்கு உணவு போல உயிருக்கு உணர்வுபோல ஆத்ம இயக் கத்துக்கு அத்தியாவசியமானவை அவை. பதி பசு பாசங்களின் பிறிவற்ற செறிவினால் விளையும் ஆற்றலால் நிகழ்வதே ஆன்ம இயக்கம். உயிரின் லௌகிகம் ஆத்மிகம் இரண்டையும் அதிட் டித்து நிற்பதற்கு அவ்வாற்றலைவிட மற்றொன்றில்லை. அது காட்சிவகையாலுமில்லை கருத்துவகையாலுமில்லை. அந்த உண்மையை உணர்வு பூர்வமாக ஏற்று ஆத்மீக விளக்கம் சார்பான அநுபவக் கூறுகளை நடைமுறை வாழ்க்கை விதிக ளாலும் தனித்துவமான வழிபாட்டநுசரணைகளாலும் மந்திரக் கிரியா பாவனைகளாலும் அநுவதித் தொழுகுவது சைவ லக்ஷணம். அந்த லக்ஷணத்தில் முற்றுமுழுதாகத் தங்கியுள்ளது ஆன்ம விமோசனமான இலட்சியம். ஆதலால் சைவமுஞ் சைவ சித்தாந்தமும் ஆன்மாவுஞ் சிவனும் போல அத்துவிதம். நகமுஞ் சதையும் போலெனினு மொக்கும். எனவே, சிவனைவிட்டு ஆன்மாவைப் பிரிக்க முடியாதது போல, தசையைவிட்டு நகத்தை வேறாக்குதல் முடியாதது போலச் சைவசித்தாந்தத்தை விட்டுச் சைவத்தை வேறுபடுத்திக் கொள்ளமுடியாமையால் ஒன்றை ஏற்க விரும்புபவர் மற்றதையுஞ் சேர்த்து ஒரேயடியாக ஏற்கக் கடவர் என்பதே துணிபு. இத்துணிபுக்குத் தகுந்த எடுத்துக்காட்டாக விளங்குபவர் லீலாவதி அம்மையார்.

சைவநிலை நின்றன்றிச் சைவசித்தாந்த அறிவும் உருப் படாது. அநுபவமும் தெறிப்படாது என்ற உண்மைக்கு மலை யிலக்காயிருக்கும் இவ்வம்மையார் பண்புக்கு ஏற்குமாறு போல் தூய சைவ ஆசாரசீலராயிருந்து சைவசித்தாந்தத்தைக் கற்றும்



கற்பித்தும், எழுதியும் பேசியும், எழுதியபடியும் பேசியபடியும் நடந்தும் அதனால் விளைந்த பிரத்தியேக ஆற்றலால் புதுப்புதுச் சைவசித்தாந்த நுண்ணுணர்வு விளக்கங்களைத் தோற்றியும் தாமும் வாழ்ந்து பிறரையும் வாழ்வித்த ஆன்றோர் எழுவர் பற்றிய மதிப்பீடு அம்மையார் நினைவுக் கட்டுரையாகிய இதில் இடம் பெற்றிருக்கின்றது.

இவர்கள் 'தன்னாலே தனையுணர்தல்' என்ற ஆன்மீக உயர்நெறியில் இயன்றவர்கள். அவ்வித்தையைப் பிறரும் அறிய வைக்க முயன்றவர்கள்.

இன்றைய காலகட்டத்தில், 'உய்வார்கள் உய்யும் வகை யெல்லாம் உய்ந் தொழிந்தோம்' என உணராதுணர்ந்த நிலை யிலிருக்கும் நாம் இனியும் எய்யாமற் காப்பாற்றப்படுதற்கு ஏற்ற உபாயம இவர்கள் வழியிற் கிடைப்பதாகத் தெரிகிறது. இவர்களை நாம் அறிய முயல்வதில் அர்த்தமுண்டு.

இவர்கள் அறிவு நம்மறிவிற் கலக்குமளவுற்கு இவர்களின் ஆக்கங்கள் ஆழமும் அகலமுமாக அலசிக் கற்கப்பட வேண்டும். எங்கள் சைவசித்தாந்த ஆய்வியல் ஒரு சாதனைத் தரத்தை எட்டுமளவுக்கு ஊக்கும் போக்கு இவர்கள் அறிவியல் மேதைக்கு உளது. இது பிரதானமாகக் கருதப்படுதல் விரும்பத்தகும்.

சுபம்

(முன்னுரையின் கண், தியானபாவனைகளால் தழுவப்படும் எனக் குறிக்கப்பட்டவர்களும் இங்கு இடம்பெற்றுள்ள ஆன்றோர் களின் சமகாலத்தவர்களும் பிற்காலத்தவர்களுமான சைவசித் தாந்த அறிஞர் பற்றிய சுருக்கமான ஒரு விளக்கமாவது இங்கு இடம்பெறச் செய்ய வேண்டிய அவசியந் தோன்றுதலின் அது இங்கு அநுபந்தமாக அமைகின்றது.)

